# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 48 ] இரக்தாக்ஷி ஆண்டு ஆடித்திங்கள் 10—8—84 [ இதழ்

## விநாயக சதுர்த்தி

ஆவணிமீ 14உ ( 30—8—84 ) வியாழக்கிழமை.



ஸ்ரீ கற்பகவிநாயகர்

வானுலகும் மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமதம் ஐந்துகரம் மூன்றுவிழி நால்வாய்
ஆனைமுக னைப்பரவி அஞ்சலிசெய் கிற்பாம்.

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

செய்யாத பாதகம் ஒன்றில்லை
ஒன்றொன்றாய்ச் செய்ததெல்லாம்
ஐயா அளவில்லை நீயே
அறிவை அஃதியார் செயலோ
மெய்யா உயிர்க்குயிரே அடி
யேன் இவ் வினையில்என்றும்
நையாமல் ஆள்வை மதுரா
புரிச்சொக்க நாயகனே.

-சொக்கநாதக் கலித்துறை 10

ஆசிரியர் :-
வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-
மகாவித்துவான்
சி. அருணைவடிவேல்முதலியார்

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 43 | 10-8-84 | இதழ் 9

## உட்பொருள்

உ
குருபாதம்.

# ஞானசம்பந்தம்

மலர் 43 | இரக்தாக்ஷி - ஆடி - 10—8—84 | இதழ் 9

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

— ஞானசம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## அருளாளரும் ஆட்சியாளரும்

### அருளாளர் – ஆட்சியாளர் :

அருள் கண்ணுக்குத் தெரியாதது. பொருள் கண்ணுக்குத் தெரிவது. அருளை ஆட்சிசெய்வோர் அருளாளர் எனப்படுகின்றனர். பொருளை ஆட்சிசெய்வோர் பொருளாளர் அல்லது ஆட்சியாளர் எனப்படுகின்றனர். அருள் பொருளுக்கு அடிப்படை ஆதாரமாயிருப்பது. இதனல்தான் திருவள்ளுவர் முதலில் உள்ள அறத்துப்பாலில் அருளாளராகிய நீத்தார் பெருமையையும், துறவறவியலையும் அமைத்து அருளை ஆளும் அருளாளர்களின் சிறப்பை அறிவித்தார். பொருட்பாலில் பொருளை ஆளும் ஆட்சியாளரை அரசியல், அங்க இயல்களால் அறிவித்துள்ளார். எனவே பொருளுக்கு அருள் என்றுமே ஆதாரமாக– துணையாக – உதவியாக இருப்பது என்பதை அனைவரும் நன்கு உணரலாம். அருள் கண்ணுக்குப் புலப்படாததுபோலவே, நமது உடம்பில் உள்ள உயிரும் கண்ணுக்குப் புலப்படாது. ஆனல் உயிர் இல்லாவிட்டால் உடம்பு இயங்குமா? மேலும், நமது உடம்பில் நுட்பமாக உள்ள மூளை, இதயம், ஈரல் இவை உடம்பினுள் மறைந்து நின்றே கண்ணுக்குப் புலப்படாமல்

உடம்பை இயக்குகின்றன. இயங்குகின்ற கை, கால், முதலிய உடல் உறுப்புக்களின் செயல்களை உணர்கின்ற சாதாரண மனிதன், இயக்குகின்ற உயிர், மூளை, இதயம், ஈரல் முதலிய வற்றையும் உணர முற்படவேண்டும். அதேபோலத்தான் ஆட்சிக்கு முதலாக உள்ள அருளையும், அருளாளரையும் அவர் கட்கும் மூலமாக உள்ள கடவுளையும் உணர்தல்வேண்டும்.

உலக வரலாற்றினை உற்றுநோக்கினல் அருளாளர்களும், ஆட்சியாளர்களும் இணைந்துசெயல்பட்டிருப்பதைக்காணலாம். அருளாளர் நல் அருளினல் ஆட்சியாளர் ஆன்மபலம்பெற்று நல் ஆட்சி நடத்தமுடியும். ஆட்சியாளர் நல் ஆட்சியால் அருளாளர் சீரியமுறையில் ஆன்மிகசேவை ஆற்றமுடியும். மக்கள் ஆன்மிகத்துறையில் மேலோங்கி அறநெறிகடைப் பிடித்து ஆக்கப்பணிகள் செய்யமுடியும். எனவே இவ்விருதிறத் தாரும் பரஸ்பரம் பரிமாறிக்கொள்வதால் மக்கட் சமுதாயத்தில் நன்மை பெருகும், நாட்டிற்கு வலிவும் பொலிவும் உண்டாகும். சங்கடம் தீரும் – சாந்தி நிலவும்.

**மக்கள் பண்பாடு :**

சமுதாயத்தில் நல் ஆட்சி நிலவினல் அன்றி நல்வளம் நிலவாது என்பது அறிஞர் கண்ட உண்மை. இவ்வுண்மை தமிழ் இலக்கியங்களில் எங்கணும் பரந்துகிடக்கப்பார்க்கலாம். நாட்டில் நலம் குன்றி வளம் கெட்டு நலிவு ஏற்பட்டால், நாட்டு மக்கள் நாட்டை ஆளும் ஆட்சியாளரைப் பழிப்பது மக்கட் பண்பாடாகும். புறநானூற்றுப் புலவர் ஒருவர் இக்கருத்தைத் தெளிவிக்கிருர்.

" மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலன் பழிக்கும் இக் கண்ணகல் ஞாலம் "

" மழை பொய்த்தாலும், வருவாய் குறைந்தாலும், இயற் கைக்கு எதிராக ஏதேனும் செயற்கையாக நிகழ்ந்தாலும் ஆட்சி யாளரை மக்கள் அவதூறு கூறிப் பழித்துப் பேசுவர் " என்பது புறநானூறு கூறும் பொது நெறியாகும்.

**இருதிறத்தார் வாக்கு :**

'கொடுங்கோன்மை' என்னும் அதிகாரத்தில் அமைந்த வள்ளுவர் வாசகமும் இக்கருத்தை அரண் செய்கிறது. " அரசன் நன்முறையில் நாட்டாட்சி புரியவில்லை என்ருல் பசுக்கள் வழங்கும் பால் வளம் குன்றும் ; பார்ப்பனர் கற்ற வேதங்களை மறந்து மயங்குவர் " என்பது அத்தமிழ்மறை வாசகம்.

" ஆபயன் குன்றும் அருமறையோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின் "

திருமூலரும் தமது திருமந்திரத்துள், 'நாட்டு மக்களின் நற்செயல்களால் நன்மையும், அற்பச்செயல்களால் தீமையும் உண்டாகின்றன; நன்மைகளைக்காத்து தீமைகளை அகற்ற வேண்டியது நாடாள்வோரின் கடமை' என்பதை நன்கு வலியுறுத்துகின்றார்.

" இன்பமும் துன்பமும் நாட்டா ரிடத்துள்ள
நன்செயல் புன்செயலாய் அந்த நாட்டிற்காம்
என்ப இறைநாடி நாள்தோறும் நாட்டினில்
மன்பதை செப்பம் செயின்வையம் வாழுமே "

ஆட்சியாளர்களுட் சிறந்த சேரன்செங்குட்டுவன் அனுபவ வாக்காக இளங்கோவடிகள் கூறும் சிலம்புப்பகுதியும் நமக்குச் சிறந்த அனுபவமாகும்.

" மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில். "

## அருளாளரை அனுசரிக்க :

சைவசமயாசாரியருள் முதலாமவரான திருஞானசம்பந்தர் சமண இருள் தீரப் பாண்டிநாட்டில் பக்தி விளக்கு ஏற்றிப் பயன்மிக்கமுறையில் தொண்டாற்றினர், 'தமிழ்ஞானசம்பந்தர்' என்றதனிச்சிறப்புப்பெற்றுத் தன்னிகரற்றஞானச்செங்கதிராகத் திகழ்ந்தார். நாவுக்கரசர், மணிவாசகர், மெய்கண்டார்போன்ற ஞானியர்களும் சமுதாய உயர்விற்கு ஒப்பற்ற பணியாற்றினர். சாக்ரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில் போன்ற தத்துவப் பெரியார்கள் மேலைநாட்டில் தோன்றி மேன்மையைப் புரிந்தார்கள். மெய்ஞ்ஞானியர்தாம் சமுதாயம் மேல்நிலை எய்த உதவமுடியும் என்பது சரித்திரம் காட்டும் உண்மையாகும். எனவே ஆட்சியாளர் ஆக்கப்பணிகள் புரியவேண்டும் எனில் அருளாளர்களை அனுசரிக்கவேண்டுவது மிகவும் அவசியமாகும். அருளாளர்கள் உளம் வருந்தச் செயல்படுவதும், சமய நெறியாளர் சங்கடப்படும் முறையில் சட்டங்கள் இயற்றுவதும் திட்டங்கள் தீட்டுவதும் பொதுவாக விரும்பத்தக்கது அல்ல. இப்படிப்பட்ட சூழ்நிலை ஏற்பட்டால் ஆட்சியாளர் அருளாளர்களைக் கலந்துபேசிப் பரஸ்பர நன்மை தீமைகளை அலசி ஆய்ந்து உரிய முறையில் செயற்படவேண்டுவது அவசியமும் அவசரமும் ஆகும். இது குறித்து வணக்கத்திற்கும்வழிபாட்டிற்கும்உரிய

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அடிக்கடி வற்புறுத்தி வருகிறார்கள். ஆட்சியாளர் – எவர் ஆட்சிபீடத்தில் அமர்ந்திருப்பினும் அவர்கள் அறநெறி வழுவாமல் ஆட்சி நடத்த வேண்டும் என்ற கோட்பாடு உடையவராதல்வேண்டும் எனப் பெரிதும் அறிவுறுத்துகின்றார்கள்.

## அரசாங்கத்தின் கடமை:

ஆலயங்கள் ஆன்மீக வளர்ச்சி மையங்கள். தெய்வங்களுக்கு நிகழ்த்தப்படவேண்டிய பூஜைகள் சரிவர நடத்தப்படவில்லை என்றால் அது நாட்டுக்கோ அரசாங்கத்திற்கோ நல்லது அல்ல; தெய்வப்பிரீதியால் இயற்கை இயல்பாக இயங்கும். தெய்வப்ரீதிகெட்டால் தேசத்தில் சுபிட்சம் விளங்காது; நன்மை பெருகாது. இறைவன் அம்சமேயாகத் திகழும் இயற்கைநிலை மாறிக்கெடும். காலா காலத்தில் மழைபெய்வதும் அதனால்மலிவளம்சுரந்து வருவாய்மிகுவதும், நாட்டில் சுபிட்சம் வளர்ந்து சுகவாழ்வு வருவதும் தெய்வச்செயலே அன்றி மனிதச் செயல் அன்று. ஆட்சியாளர் இதைக் கருதி அருளாளர்களை அனுசரித்து ஆலயங்களைக்காத்து நடக்கவேண்டும். மூலமாக உள்ள திருக்கோயில்களில் பூசைமுட்டின்றி நடைபெற வேண்டும் அப்போதுதான் ஆட்சிக்கு அழிவில்லை. மாரிவளம் பெருகும், வாரிவளம் நிறையும், பசியும் பிணியும் நீங்கும், வசியும் வளமும் பெருகும்.

## அரசைப் பாராட்டுவோம் :

இறையருளால் தமிழக அரசு திருக்கோயில்களை அருளறநிலையங்களைக் கண்திறந்துபார்க்கத் தொடங்கியிருக்கின்றது. 38 ஆவது சுதந்திர தினத்தில் ஒரு வழியையும் தொடங்குகிறது. அறநிலையங்களின் உபரி நிதியிலிருந்து ஐந்துகோடிரூபாய் நிலைநிதி அமைக்கிறது. அதிலிருந்துகிடைக்கும் வட்டியினால் இயலாத அறநிலையங்களுக்கு உயிர்கொடுக்க முன்வந்துள்ளது. இவ்வறச்செயலைச்செய்ய முன்வந்துள்ள தமிழக அரசின் முதல்வரையும் அறநிலைய அமைச்சரையும் பாராட்டுகிறோம். இது முதலுதவியாகத்தான் கருதலாமேதவிர பூரணநிவாரணமாகி விடாது. நிலையான நிவாரணம் அறநிலையங்களுக்கு அன்று அறவுணர்வுபடைத்தோர் வழங்கிய நிலங்களுக்கு நியாயமான குத்தகைகளைகிடைக்கச்செய்வதேயாகும். அதற்கு அறநிலையங்களுக்கு அரசுச் சட்டத்திலிருந்து விதிவிலக்கு அளிப்பதே பூரண நிவாரணமாகும். இதனையும் விரைவில் தமிழக அரசின் ஆட்சியாளர்கள் செய்வார்களென எதிர்ப்பார்ப்போம்! இனிதே வாழ்த்துவோம்!!

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

தூத்துக்குடி சைவசித்தாந்தசபையின் நூற்றாண்டு விழாவிற்கு

வழங்கியருளிய

# ஆசியுரை

6—8—1984

உணர்த்தில் உணர்வேன் உணர்த்தாயேல் நாயேன்
கணத்தும் உணரும்வகைகாணேன் — உணர்த்தியென்னுட்
பூண்டமல மாயைகன்மம் போக்கிச் சிவானந்தத்
தாண்டருள்வை சொக்கநா தா.

உலக சமயங்கள் அனைத்தையும் படிநிலைகளாகக்கொண்டு அவற்றின் மேம்பட்டு விளங்குவது சைவசமயம். சைவசமயக் கோட்பாடுகள், தத்துவங்கள், பிறநெறிமுறைகள் ஆகியன ஆன்றோர் அனுபவத்திற்கும் அறிவாராய்ச்சிக்கும் ஒத்தமுறையில் அமைந்தவை. ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு காலத்தில் தோன்றிய காலவரையறை உடையன. சைவசமயம் காலத்தாலும் கருத்தாலும் தொன்மையும் பெருமையும் உடையதாய் விளங்கிவருவது.

## மேனாட்டறிஞர்கள் :

சைவசமயத்தின் முடிந்த முடிபான கொள்கைகள் சைவசித்தாந்தம் எனப் பெயர்பெறும். இக்கொள்கைகளை மேனாட்டறிஞர் பலரும் போற்றிப் புகழ்கின்றனர். 'இந்தியாவிலுள்ள மதங்கள் அனைத்திலும் சைவசித்தாந்தமே மிகவும் மேம்பட்டது' என்கிறார் ஜி. யு. போப். 'சைவசித்தாந்தம் இந்தியர் சிந்தனைகளின் - உணர்வுகளின் சிகரமாய் விளங்குகிறது' என்கிறார் கௌடி. "சைவசித்தாந்தம் இவ்வுலகில் வாழும் சமயங்களில் மிகமிகப் பழமையானதாகும்" என்கிறார் சர்ஜான் மார்ஷல். இவ்வாறு பலரும் போற்ற ஏனைய மதக் கொள்கைகளைத் தன்னகத்தே அடக்கி அவற்றின் வேறாய் நின்று உண்மைநெறிகளை விளக்கும் தலைசிறந்த மெய்ப் பொருளியலாகத் திகழும் நமது சைவசித்தாந்தம் நாம் மேற்கொண்டுள்ள சமயநெறி என்பதை எண்ணிச் சைவர்கள் அனைவரும் பெருமையுறலாம்.

சைவசமயத்தினரால் முழுமுதற் பரம் பொருளாகப் போற்றி வழிபடப் பெறுபவர் சிவபெருமான் ஒருவரேயாவார். ஏனைய தெய்வங்கள் படிமுறையில் அவர் ஆணைவழி நிற்பனவாகும். சிவபிரானை வழிபடும் சமயம் என்ற பொருளில்தான் சைவம் என்ற பெயரே தோன்றியது. சிவபிரானுக்கே சைவன் என்றொரு பெயருமிருத்தலைத் தேவாரம் காட்டுகிறது.

## சிவவழிபாடு :

சிவன் என்றசொல்லுக்கு மங்கலங்களைத்தருபவன் என்பது பொருள். சிவவழிபாடு உலகெங்கும் பரவியிருந்ததை வரலாற்றறிஞர்கள் கண்டறிந்து கூறிவருகின்றனர். கடல் கடந்த நாடுகளான சயாம், பிஜி, தாய்லாந்து முதலிய நாடுகளில் சிவ வழிபாட்டுச் சின்னங்கள் இருத்தலை ஆய்வாளர்கள் வெளிப்படுத்துகின்றனர். தென்னாடுடைய சிவனே எந்நாட்டவர்க்கும் இறைவனாய் விளங்கியருளுகிறான் என்பதை மணிவாசகப் பெருமான் திருவாசகத்தில் குறிப்பிடுகிறார். இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்பு விளங்கிய உலக நாகரிகங்களில் ஒன்றான சிந்துசமவெளியில் சிவவழிபாடு இருந்ததை அகழ்வாராய்ச்சியாளர் கூறுகின்றனர். சிவவழிபாட்டையே தமிழக மக்கள் மேற்கொண்டிருந்தனர் என்பதைச் சங்க நூல்கள் பலவும் தெரிவிக்கின்றன.

## பதி, பசு, பாசம் :

சைவ சமயம் பதி, பசு, பாசம் என்ற மூன்று பொருள்களும் என்றும் உள்ளபொருள்கள் எனக்கூறும் சமயமாகும். பதி – தலைவன். பாசம் – தளை. பாசத்தால் பிணைக்கப்பட்டது என்ற பொருளில் உயிரைப் பசு எனக்கூறுகிறோம். பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள்களையும் தமிழில் இறை, உயிர், தளை எனக் கூறுவர். இறைவன் ஒருவனே. உயிர்கள் பல. தளை–ஆணவம், கன்மம், மாயை என மூவகைப்படும். இறைவன், சுதந்திரனாயிருப்பவன், தூய உடம்பினன், இயற்கை உணர்வினன், முற்றும் உணர்ந்தவன், இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன், பேரருளுடையவன், அளவிலாற்றலுடையவன், வரம்பில் இன்பமுடையவன்.

உயிர்களோ ? சுதந்திரம் இல்லாதன, மாயையால் ஆக்கப்பட்ட உடம்பையுடையன, கருவிகரணங்களாலான செயற்கை உணர்வின, இறையருளால் பாச நீக்கம்பெறுவன. இறை அறிவித்தால் அறியும் சிற்றறிவுடையன. இறையருளால் அவனுடன் கலந்து பேரின்பம் உறுவன.

ஆணவம், உயிர்களின் அறிவை மறைக்கும் ஆற்றலையும், கீழ்நோக்கிச்செலுத்தும் ஆற்றலையும் உடையது அறிவில்லாதது. கன்மம், வினை என்பன ஒருபொருட்சொற்களே. இருசொற்களும் செயல் என்பதையே குறிக்கும். நல்வினை, தீவினையாகிய புண்ணியபாவங்களையே இருவினை என்கிறோம். உயிர் கருவி கரணங்களைக்கொண்டு கர்மத்தை செய்யச்செய்ய பக்குவம் உண்டாகி இறையருளைப்பெறும். மாயை, உயிர்களுக்கு முப்பத்தாறு தத்துவங்களாகி விளக்கம்தரும். சூரிய ஒளி வரும்வரை இருளில் விளக்கு ஒளிதருவதுபோல் மாயை நமக்கு உதவும். இதையே மெய்கண்டார் "மாயாதனுவிளக்கா" என்றும், விடிவாமளவும் விளக்கனைய என்றும் அருளினர். சைவசித்தாந்தம் இறை இயல்புகளையும், உயிரியல்புகளையும் தளை இயல்புகளையும் தெளிய உணர்த்தி உலக வாழ்க்கையில் பிறந்திறந்துழலும் உயிர்கள் பிறப்பிறப்பிலிருந்து நீங்கி இறைவனது திருவடி அடைதலினாலேயே நிலையான இன்பத்தைப் பெறமுடியும் எனக்கூறுகிறது.

## மெய்ப்பொருட்குழப்பம் :

சைவசித்தாந்தக் கொள்கைகள் மிகப் பழமையானவையாக இருப்பினும் அதனைத்தெளிய உணர்தலில் பலருக்கும் குழப்பம் ஏற்பட்டது என்பதைச் சமய வரலாறுகளில் காண்கிறோம். வேதங்களை முற்றக்கற்று வகைப்படுத்திய வியாச முனிவரே சிவபிரானே மெய்ப்பொருள் என்பதை உணராமல் திருமாலே பரம்பொருள் எனக்கூறி நந்தி தேவரால் தண்டிக்கப்பட்டார் எனக் கந்தபுராணம் கூறுகிறது.

நான்மறைகளையும் ஆறு அங்கங்களையும் கற்றறிந்த சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் ஆகிய நான்கு முனிவர்களும் உண்மைப்பொருள் எதுஎன்பதை அறியாதுஇடர்ப்பட்டு இறைவனிடம் சரணடைய, இறைவன் அவர்கட்குக் கல்லாலின் கீழிருந்து கைம்மலர்க்காட்சியால் உண்மை உணர்த்தியதையும் கந்தபுராணம் கூறுகிறது.

மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயிர்
அம்மலர்த் தாள்நிழல் அடங்கும் உண்மையைக்
கைம்மலர்க் காட்சியில் கதுவ நல்கிய
செம்மலை யலதுளம் சிந்தி யாதரோ.

என இந்நிகழ்ச்சியை ஒருபாடல் விளக்கிக்கூறுகிறது.

பாசி நிறைந்த குளத்தில் கல்லெறிந்தால் பாசி சிறிதுநேரம் விலகி நீரைக்காட்டும். பின்னர் பாசி மூடிக்கொண்டு நீரை மறைத்துநிற்கும்; அதுபோல அவ்வப்போது இறைவனே எழுந்தருளிவந்து சமய உலகில் ஏற்படுகின்ற குழப்பங்களை அகற்றி வந்துள்ளார் என அறிகிறோம்.

## திருமூலர் காட்டிய தெளிவு :

வேதம், உபநிடதம், புராணம், இதிகாசம் ஆகியவற்றில் பொதுவாகக்கூறி இருக்கும் உண்மைப்பொருள்களை நம் முன்னோர் அவ்வப்போது நமக்குச்சிறப்பாக உணர்த்தி வந்துள்ளனர். சைவத்தின் மேற்சமயம் வேறிலை அதிற்சார் சிவமாம் தெய்வத்தின்மேல் தெய்வமில்லை என்னும் நான்மறைச் செம்பொருள் வாய்மையைப் பன்னிரு திருமுறைகளும் நமக்குத் தெளிய உணர்த்தியுள்ளன.

கி. பி. 5 ஆம் நூற்றாண்டினராகக் கருதப்பெறும் திருமூலர் சைவ சமயத்தின் உயிர்க் கொள்கையைத் தெளிவுசெய்துரைக்கிறார்.

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு பாசம் அநாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்;
பதியணு கிற்பசு, பாசம்நி லாவே.

என்பதொரு திருமந்திரம் சைவசித்தாந்த மெய்ப்பொருளியலை நன்கு தெளிவுசெய்வதாக உள்ளது.

இப்பாடலில் பதி,பசு,பாசம்மூன்றுமே அநாதியான நித்தியப் பொருள்கள் என்பது முதல் இரண்டு வரிகளில் கூறப்படுகிறது. இவற்றுள் பதியும் பசுவும் சித்துப் பொருள்கள், சித்து – அறிவு. பாசம் சடப்பொருள், சடம் – அறிவில்பொருள். பசு, பதியை அடைதற்குத் தடையாயிருப்பது பாசம். இது செம்பிற் களிம்பு போல உயிரறிவைப் பற்றியிருந்து பதியை அடையவொட்டாமல் பசுவுக்குத் துன்பம் விளைத்துவருவது. கதிரவன்முன் இருள் நில்லாதவாறுபோலப் பதியின்முன் பாசம் நில்லாது ஓடும். இறைவன் பல்லூழிகாலம் காரிட்ட ஆணவக் கருவறையில் கட்டுண்டுகிடந்துஉழலும் உயிர்களின் அறிவை கருணையினால் சிறிது விளங்கச்செய்தருளுகிறார் உயிர் இறைவன் அறிவித்தால் அன்றி அறியமாட்டாத தன்மையுடையது. ஆகவே பசுவும், பாசமும் பதியை அணுகமாட்டா என்று மூன்றும் வரியில் கூறுகிறார் எனவே பதி பெருங்கருணையால் பசுவை அணுகி அதற்கு அருள்புரியும்போது பாசம் பசுவினைவிட்டு நில்லாது ஓடும் என்பது நான்காம் வரியின் கருத்தாகும். சைவசித்தாந்தம் மெய்கண்டாருக்குமுன் திருமூலர் காலத்திலேயே தெளியவழங்கியதை இப்பாடல் நமக்கு நன்கு எடுத்துக்காட்டும்.

## திருஞானசம்பந்தர் கண்ட தெளிவு :

கி. பி. 7 ஆம் நூற்றாண்டில் தோன்றியருளிய திருஞான சம்பந்தர் தேவாரத் திருமுறைகளில் சைவசித்தாந்த உண்மைப்

பொருள்களை உணர்த்தியருள்கிறார். திருமுதுகுன்றத்தேவாரத்தில் முப்பொருளியல்புகளை அவர் கூறியருளும் திறன் அறிஞர் களுக்குப் பெருவிருந்தாயமையும் எனலாம்.

விளையாததொர் பரிசில்வரு பசு,பாச,வே தனை,ஒண்
தளை,யாயின தவிரவ்வருள் தலைவன் னது சார்பாம்
களையார்தரு கதிராயிரம் உடையவ்வவ னோடு
முளைமாமதி தவழும்உயர் முதுகுன்றடை வோமே.

என்ற பாடலின் முன்னிரு வரிகள் முப்பொருளியல்புகளைத் தெரிவிக்கின்றது. முப்பொருளும் என்று தோன்றியன என்று அறியப்படாதவை என்பதை 'விளையாத தொரு பரிசில்வரு' என்ற தொடர் உணர்த்தும் பசு – உயிர். பாசம் – ஆணவம், வேதனை - கன்மம். ஒண்தளை–மாயை. பசுவைப் பற்றிநிற்கும் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும் தவிர்த்து அருள்செய்யும் தலைவன் எழுந்தருளியிருக்குமிடம் முதுகுன்றம் என்கிறது. எனவேஞானசம்பந்தர் அழகுறக்கூறும் இத்தேவாரத் திருப்பாடல் அவர்காலத்திலும் நமது சைவசித்தாந்தக் கொள் கைகள் மேம்பட்டு விளங்கியதை நன்கு எடுத்துக்காட்டும்.

## இறைவனின் மூவகைநிலை :

இறைவன் உயிர்கட்கு ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று அருள்செய்பவன் என்பதைச் சிவஞானபோதம் 2ஆம் சூத்திரம் தெரிவிக்கிறது. இறைவன் இவ்வாறு அருள்செய்தலைத்தெளிவாக நமக்குத் தெரிவித்தவர் திருஞானசம்பந்தரேயாவார் என்பதை அவர் அருளிய,

ஈறாய்,முதல் ஒன்றாய்,இரு பெண் ஆண்,குணம் மூன்றாய்,
மாறாமறை நான்காய்,வரு பூதம் அவை ஐந்தாய்,
ஆறார்சுவை, ஏழோசையோடு, எட்டுத்திசை தானாய்,
வேறாய்,உடனானான்,இடம் வீழிம்மிழ லையே.

என்ற தேவாரம்விளக்குகிறது. இறைவன் உடலும் உயிரும் போல ஒன்றாய் நின்றும், காணும் கண்ணுக்குக் காட்டும் ஒளி போல வேறாய் நின்றும், உயிர் அறிவும் கண்ணொளியும் போல உடனாய் நின்றும் அருள்புரிவார். ஞானசம்பந்தர் இறைவன் எல்லாமாய் விளங்கி ஒன்றாய் நின்றும், வேறாயிருந்தும், உடனா யிருந்தும் அருள்செய்கிறான் என இத்தேவாரத்தில் குறிப்பிடு கிறார் சைவசித்தாந்தம்கூறும் முப்பத்தாறு தத்துவங்களையும் திருஞானசம்பந்தர், புவிமுதலைம் பூதமாய்ப், புலனைந்தாய், நிலை னைந்தாய். கரணம் நான்காய், அவையவை சேர் பயனுமாவாய் அல்லஉருவாய் நிற்கும், இறை இயல்புகளைத் தெரிவித்தருள் கிறார்.

**மெய்கண்டார் :**

இவ்வாறு பன்னெடுங்காலமாகத் தோன்றி வளர்ந்து வந்த சைவசமயக் கொள்கைகளில் கி. பி. 8 ஆம் நூற்றாண்டில் மீண்டும் குழப்பம் ஏற்பட்டதென அறிகிறோம். அத்வைதம் என்ற சொல்லுக்குக் கொள்ளும் பொருளை அடிப்படையாக வைத்து ஏகான்மவாதம் என்னும் மாயாவாதக் கொள்கை வளர்ந்து நாட்டில் வேகமாகப் பரவத்தொடங்கியது.

கி.பி.13 ஆம் நூற்றாண்டில் திருக்கயிலாயபரம்பரையில் நந்தி மரபில் மெய்கண்டார் திருவவதாரம் செய்து இக்குழப்பங்களை அகற்றி மீண்டும் சைவசித்தாந்தச் செந்நெறியை தர்க்கரீதியாக நிலைநிறுத்தியருளினர். அவர்வழியில் அருணந்தி சிவாசாரியார் உமாபதிசிவம் முதலானோர் தோன்றிச் சித்தாந்தச் செம்பொருள் இயல்புகளை விளங்க உரைத்தருளினர். இவ்வாறு வளர்ந்து தழைத்துவந்த சைவசித்தாந்தச் செந்நெறி திருக்கயிலாய பரம்பரையில் மெய்கண்ட சந்தானத்தில் வழிவழியாக வரும் சைவ ஆதீனங்களால் போற்றிப் பாதுகாக்கப்பெற்று வருகிறது.

**அன்புநெறி அறிவுநெறி:**

இறைவனை அடையத்தக்க நெறிகள் இரண்டு. அவை பக்திநெறி, ஞானநெறி அல்லது அன்புநெறி, அறிவுநெறி என்று கூறப்பெறும். சமயாசாரியர் தேவார திருவாசகங்களை அருளி அன்புநெறியை மக்களுக்கு மிகுதியாக அறிவுறுத்தினர். சந்தானசாரியர்கள் அறிவுநெறியை மக்களுக்குப் போதித்து நம் சமய உண்மைகளைக் கண்டறியச் செய்தனர். இவ்விரு வகை நெறிகளும் இறைவனருளைக் காணுதற்கு அமைந்த இரண்டு கண்கள்போல விளங்கி வருகின்றன.

சைவசித்தாந்தம் வேதம் ஆகமம் திருமுறை இவற்றின் வழி வந்தவைஎன்பதை நாம் மறத்தல் கூடாது. வேதம் எல்லாச் சமயங்களுக்கும் பொதுநூல். ஆகமம் நம் சைவ சமயத்துக்குச் சிறப்புநூல். அவற்றின் வழிவந்தனவே பன்னிரு திருமுறைகளும் பதினான்கு சாத்திரங்களுமாகும். இதனை உருவகம் ஒன்றால் பின்வரும் பாடல் தெரிவிக்கிறது.

வேதம் பசு,அதன்பால் மெய்யாகமம், நால்வர்
ஓதும் தமிழ் அதனின் உள்ளுறும்நெய், — போதமிகு
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்.

என்பதுதான் அப்பாடல். இத்தகைய மரபுகளை நாம் வழுவாது போற்றிக் கொண்டாடக் கடமைப்பட்டுள்ளோம்.

**மெய்கண்டார் வழியில்:**

கி. பி. 16 ஆம் நூற்றுண்டில் தோன்றி தருமையாதீனத்தை நிறுவியருளிய நமது ஆதிபரமாசாரியராகிய ஸ்ரீகுருஞானசம்பந்தர் அன்பு நெறி, அறிவு நெறி ஆகிய இருவகை நெறிகளையும் போற்றிப்புரந்த அருளாளர் ஆவர். அவர் அருளிய சொக்கநாத வெண்பா என்னும் தோத்திரநூல் அன்பு நெறிக்கு இலக்கியமாகவும், சிவபோகசாரம், அறிவு நெறிக்கு இலக்கியமாகவும் திகழ்கின்றன.

என்னால் உனையடைய வல்லேன் எனில்இடரில்
இன்னாள் அளவும் இருப்பேனே — பன்னுகம்
பூண்டவா வேணிப் புனிதா மதுரைநகர்
ஆண்டவா சொக்கநா தா.

என்னை அறிவென்முன் என்னறிவில் ஆனந்தம்
தன்னைச் சிவமென்முன் சந்ததமும் — என்னை உன்னிப்
பாரா மறைத்ததுவே பாசமென்முன் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம.

என்ற சொக்கநாத வெண்பா, சிவபோகசாரப்பாடல்கள் சைவ சமயக் கோட்பாடுகளை விளக்கி மெய்யுணர்வை நமக்குத் தோற்றுவிப்பனவாகும்.

இவ்வாறுவளர்ந்துதழைத்துவரும் சைவசித்தாந்தத்தச் செந்நெறியை உலக மக்களுக்கு உணர்த்தும் நிலையில் விளங்குவன திருக்கயிலாய பரம்பரையில் வந்ததருளும் மடாலயங்களாகும். மேலும் இவற்றை அடியொற்றி நாடெங்கும் சைவசித்தாந்த மன்றங்கள் சபைகள் ஆகியனவும்தோன்றி இந்நெறியை நன்கு வளர்த்துவருகின்றன. இத்தகைய சபைகளில் தூத்துக்குடி சைவசித்தாந்தசபை, திரிசிரபுரம்சைவசித்தாந்தசபை முதலியனவும், சென்னை சைவசித்தாந்த மகாசமாஜமும் குறிப்பிடத்தக்க பெருமை உடையனவாகும்.

**வாழ்த்து:**

தூத்துக்குடி சைவசித்தாந்த சபை சைவசித்தாந்த அறிஞர்களாகவிளங்கிய, திரு. பொ. முத்தையாப்பிள்ளை, திரு சிவகுருநாத பிள்ளை முதலியோரால் போற்றி வளர்த்துவந்த சிறப்புடையது. இச்சபையைத்தோற்றுவித்து இந்நாள்வரை வளர்த்த அன்பர்களைப் பாராட்டுகிமும். சைவசித்தாந்தசபையின் நூற்றுண்டு விழாவைச் சீரும் சிறப்புமாக நடத்தும் அன்பர்களையும் இவ் விழாவில் பங்குகொள்ளும் அறிஞர்களையும் வாழ்த்துகிறோம். சபை மென்மேலும் பல்லாண்டுகள் வளர்ந்து சிறந்து சைவ சித்தாந்த உண்மைப் பொருள்களை உலகவர்க்கு உணர்த்தி நல்லபல தொண்டுகளை நாளும்செய்துவர செந்தமிழ்ச்சொக்கன் திருவருளைச் சிந்திக்கிறோம்.

# தன்னை நினையத் தருதல்

தருமையாதீனப்புலவர், செஞ்சொற்கொண்டல், தமிழாகரர்,
டாக்டர் திரு. செ. சிங்காரவேலன் M A, Ph. D.,
தமிழ்ப்பேராசிரியர், அ. வ. அ. கல்லூரி, மயிலாடுதுறை.

## நம்பிகளும் இரட்டைமணிமாலையும்:

திருநாரையூரின்கண் எழுந்தருளியிருக்கும் பொல்லாப் பிள்ளையாரை வழிபடுகடவுளாகக் கொண்ட நம்பியாண்டார் நம்பிகள் என்ற அருளாளர்பாடிய அழகிய அருள் நூல் "விநாயகர் திரு இரட்டை மணிமாலை"; இது திருநாரையூர் விநாயகர் மீது பாடப்பெற்ற நூல். திருமுறைகண்ட புராணப்படி, இவரே தேவாரத் திருமுறைகளைத் தொகுத்த நல்லாசிரியர் ஆவர். கி. பி. 9 ஆம் நூற்றுண்டின் இறுதியும் 10 ஆம் நூற்றுண்டின் தொடக்கமும் ஆகிய காலப்பகுதியில் இவர் வாழ்ந்தவர் என்பர் அறிஞர். (பன்னிரு திருமுறை வரலாறு முதற்பகுதி 15-20 பக்கங்கள்) வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் ஆகிய இருவகைப் பாக்களால், அந்தாதித் தொடைவர யாகப்பெற்ற இந்நூலின் முதற் பாடல் பின்வருவது:

> " என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்
> **தன்னை நினையத் தருகின்ருன்** — புன்னை
> விரசு மகிழ்சோலை வியன்நாரையூர் முக்கண்
> அரசு மகிழ் அத்தி முகத்தான் "

இதன்கண் வரும் இரண்டாம் அடியில், "தன்னை நினையத் தருகின்ருன்" எனவரும் தொடர்க்குரியமெய்ப்பொருளைச் சிந்திப்பதே இச்சிற்றுய்வின் நோக்கம். "புன்னை மரங்களையும், மகிழ மரங்களையும் உடைய அழகிய சோலையாற் சூழப்பெற்ற திருநாரையூரிற் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள முக்கட் பெருமானுகிய சிவபிரான் மகிழும் மூத்த பிள்ளையாராகிய வேழமுகத்துப்பெருமான் என்மீது கொண்ட கருணையால், என்னை நினைந்து ஆட்கொண்டு என் பிறவித்துன்பத்தைப் போக்கி, பரம்பொருளாகிய தன்னைச் சிறிதும் இடையறவுபடாது நினைந்து பரவும் மெய்யறிவை எனக்கு வழங்கியருள்கின்ருன்" என்பது இப்பாடலின்பொழிப்புப்பொருள். இதன்கண் முன்னும் பின்னும் அமைந்த அழகியபொருளமைப்பின் இடையேஉள்ள "தன்னை நினையத் தருகின்ருன்" என்ற தொடர் பொருளாழமும், பொருள் நுட்பமும், சித்தாந்தமெய்ப்பொருளும்சான்றதொடராகவுள்ளது.

### படிமக்காட்சி - பாடலின் மாட்சி:

அரசு, மகிழ், அத்தி என்ற மூன்று மரப் பெயர்கள் தாமே தோன்ற ஈற்றடிஎழில் சிறந்துநிற்பது தெளிவு; முக்கண் உடைய அருள் அரசனாகிய சிவபிரான் மகிழ்தற்குக் காரணனாகிய ஆனை முகப் பெருமான் என்பதே உணர்த்தவந்த பொருள். திருநாரையூரைச் சிறப்பிக்க வந்த நம்பிகள் அதன் சோலை வளத்தைக் கூறினர்; புன்னை, மகிழ் ஆகிய மரங்கள் அடர்ந்த சோலை என்றனர்; எவ்வளவோ மரங்கள் இருப்பவும் இவை இரண்டையும் ஏன் உரைக்க வேண்டும்? என்ற வினா இதனைப் படிப்போர்க்கு எழக்கூடும்; பின்னேவரும் எதுகை அமைப்பிற்காக இவை உரைக்கப்பட்டிருக்க வேண்டும் என்று உரைப்பார் வெறும் இலக்கணப் பார்வை உடையவரேயாவர். அருளாளர்கள் வெறும்எதுகை, மோனைகளில் சிந்தை செலுத்திப் பொருளை நோக்காதவர் அல்லர். ஒருபாட்டின் தொடக்கமுதல் முடிவு வரை சொல்லும் பொருளும் ஒன்றையொன்று நோக்க முழுவதுமாகச் சேர்ந்து ஓர் அழகிய வடிவமாக எழ அவற்றை இணைத்த கருத்துப்பார்வை உடையவர் ஆவர்; 'நோக்கு' என்ற தொல்காப்பியச் செய்யுளுறுப்பை இவ்விடத்துக் கருதுவது தகும்.

'விரிவு' என்றசொல்லே 'விரசு' என்ருகிறது இங்கு; 'கலந்த' என்பது பொருள். 'விரிவார்' என்பது தம்மொடு வந்து கலவாத பகைவரைக் குறிக்கத் தமிழிற் குறிக்கும் வழக்கை நோக்குதல் வேண்டும். நம்பிகள் நாரையூரைத் தாம் பிறந்த இடமாகக் கொண்டு வாழ்ந்த பெருந்தகையார்; தம்மூர்ச் சோலை மாட்சி அவர் கண்களாற் கண்ட ஒன்றே ஆகும். திருநாரையூரின் இயற்கைவளம் காட்டும் இப்பகுதி உள்ளது புனைதலாகவே இருக்கக்கூடும். புன்னை மரங்களும், மகிழ மலர்களும் நறுமண மலர்கள். திருநாரையூரில் வீற்றிருக்கும் சிவபிரான் நாயன்மார் திருப்பாடல் பெற்ற நாயகன்; தேவாரப் திருப்பாசுரங்களால் அருள்மணம் கமழ வீற்றிருக்கும் அண்ணல். செந்தமிழ்த் தெய்வமணம் கமழும் சிவபிரான் என்பதனைக் குறிப்பாகப் படிமக்காட்சி (Symbol) அமைப்பில் உணர்த்துவனவே இந்த இரண்டு சொற்களும் என்று கருதலாம்.

### நாயன்மார் வாக்கும் நம்பிகளின் நோக்கும்:

அப்பர் திருநாரையூரைப் போற்றும் திருக்குறுந்தொகைத் திருப்பதிகத்தின் முதற்பாடலிலேயே நாரையூரின் சோலைச் சிறப்பை எடுத்து மொழிந்தருளுகின்றமை இங்குக் கூர்ந்து நோக்கத்தக்கது:

" வீறு தானுடை வெற்பன் மடந்தையோர்
கூற ளுகிலும் கூன்பிறை சூடலும்
நாறு பூம்பொழில் நாரையூர் நம்பனுக்கு
ஆறு சூடலும் அம்ம அழகிதே" (திருநாரையூர்-1)

அப்பரடிகளார்க்கும் திருநாரையூர்ச் சோலைகளைச் சொல்லியாக வேண்டும் என்ற உணர்வைத் தூண்டியது அத்தலச் சூழ்நிலை. புன்னையும், மகிழும் என்ற மரங்களால் நாறு பூம்பொழில் என்று விளக்கம் கொடுப்பதுபோலமலர்கின்றது நம்பிகளின் நல்வாக்கு.

திருநாரையூரின் இயற்கை வளம் திருஞானசம்பந்தரையும் கவர்ந்த ஒன்று;

" தேம்புனல் சூழ் திகழ்மா மடுவின் திருநாரையூர்" (1)

" சீருறு மா மறுகிற் சிறைவண்டறையும் திருநாரையூர்"(6)

" வரிவண்டியாழ் முரலத்
தேனுடை மாமலரன்னம் வைகும் திருநாரையூர்" (9)

" தேமருவும்திகழ்சோலைசூழ்ந்ததிருநாரையூர்"(பழம்பஞ்சுரம்-9) என்பனவற்றை ஆளுடைய பிள்ளையார் திருவாக்கிற் காண்கின்றோம். சோலைப் புறத்து நீர்மடுக்களிலும் சம்பந்தர் திருவுள்ளம் செல்கின்றது. அங்கு மலர்களின் மீது அன்னங்கள் தங்கியிருத்தலையும் அவ்வருள் நெஞ்சம் பாடுகின்றது.

அப்பரடிகளார், ஆனைமுகப் பெருமானையும், செவ்வேட் பெருமானையும் இணைத்து இத்தலத்துப்பாடுகின்றார்; பொல்லாப் பிள்ளையார் அடிகளார் திருவுள்ளத்தும் புகுந்துவிட்ட அருள் விளைவு இது என்று குறிப்பிடுவது தவறாகாது :

" அக்கி ளெடும் என்பணிந்த அழகன் தன்னை
அறுமுகனோ டானைமுகற் கப்பன் தன்னை
நக்கனை வக்கரையானை நள்ளாற் றானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன்நானே" (தாண்டகம்-7)

இவற்றால் நம்பிகள் கூறிய சோலைவளம் இத்தலத்திற்கு இயல்பானது என்பதும், நாயன்மார் காலத்திருந்த சூழ்நிலையும் அஃதே என்பதும் இனிது விளங்கும். இனிப் பாட்டின் முதற் பகுதிக்குத் திரும்புவோம்.

## திருவருள் அநுபவம் தெளிவுறுத்தல் :

பாட்டின் முதற்பகுதி நம்பிகளின் திருவருள் அநுபவம் விளங்கும் பகுதி எனலாம். மிக்க இளம் பருவத்திலேயே பொல்லாப் பிள்ளையாரால் ஆட்கொள்ளப் பெற்ற ஆதி சைவச் சிறுவர் இவர் என்பது மரபுவரலாறு. அப்பொருண்மை விளங்கு

வதாக, "என்னை நினைந்து, அடிமைகொண்டு" என்ற தொடர்கள் அமைகின்றன. 'உம்' என்ற இடைச்சொல்லை 'என்னை' என்பதன் பின் சேர்த்துப் பொருள் கொண்டால், நம்பிகளின் உணர்வைப் புரிந்துகொள்ளலாம். 'அநுபவம்பெரிதும்இல்லாத, மிக இளையனாகிய என்னையும்' என்ற பொருள் விளங்குவதால் (இழிவு சிறப்பும்மை என்று இலக்கணம் பேசும்) உம்மையை இணைத்துக் கொள்ளுதலில் தவறொன்றும் இல்லை. தம்மை ஆளாகக் கொண்ட எளிமையை வியந்து எடுத்தஎடுப்பிலேயே நன்றியுணர்வு புலப்பட நவில்வாராயினர் நம்பிகள். ஆட்கொண்டதனால் ஆய அரும்பயனை மகிழ்ந்து ஏத்துவதாகும் "இடர் கொடுத்து" என்ற தொடர்.

"இடர்" என்பது இவ்விடத்துப் பிறவித்துன்பமே ஆம்; "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" என்பர் திருவள்ளுவர்; பிறவாநெறியே பேரருளாளர் வேண்டுகோளாக இருக்கும்; விநாயகப்பெருமான் திருவருளைப்பெற்றுவிட்டமையால் தமக்கு இனிப்பிறவி இல்லை என்று உறுதியாக உரைக்கின்றாராய்த் "தீர்த்து" என்றருளினர். திருநாரையூர்ப் பெருமானை வருத்தம் தவிர வழிபடுவோரைமலத்துன்பங்கள் வருத்தமாட்டா என்பது இரட்டை மணிமாலையில் ஏழாம் பாட்டில் சொல்லப்படும்; நெருப்பை எறும்பு அருந்த எண்ணினால் இயலாததுபோல் மலங்கள் வருத்த இயலாது விலகும் என்று அங்கு விளக்குவர்.

திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாரைப் போற்றியதால் தம் இடர்கள் தீர்ந்தன என்று இங்குத் தம்மநுபவமாகப் பேசியவர், இவ்விரட்டைமணிமாலையில் படர்க்கை நிலையில் வைத்து, "இவர் திருப்பெயர்களைக் கூறுவோர்க்கு அல்லல்கள் இல்லை" என்றும் பாடுவர் :

"நாரணன் முன்பணிந்தேத்த நின்று எல்லை நடாவியத்
தோரணவுந் திருநாரையூர் மன்னு சிவன்மகனே
காரணனே எம்கணபதியேநற் கரிவதனா
ஆரணநுண் பொருளே என்பவர்க்கில்லை அல்லல்களே." (10)

"என்னை ஆண்டவனே! என் ஐயனே!" என்று தம்மை அடிமை கொண்டு அல்லல் தீர்த்தமையை இவ்வருள் நூலின் நிறைவுப் பாட்டிலும் ஓதி மகிழ்வதை இங்கு ஒப்பிட்டுணரலாம்:

"நாந்தனமா மனம்ஏத்து கண்டாய் என்றும் நாண்மலரால்
தாந் தனமாக இருந்தனன் நாரைப்பதி தன்னுளே
சேர்ந்தனனே ஐந்து செங்கையனே நின் திரள்மருப்பை
ஏந்தினனேஎன்னை ஆண்டவனே எனக்கென்னையனே" (20)

(தொடரும்)

## ஆலய எதிர்ப்புப் பிரச்சாரத்தால் குற்றங்கள் அதிகரிப்பு

### ஆர். எம். வீ. பேச்சு

தஞ்சாவூர் ஜூலை 14 – " மக்கள் மனதில் பயபக்தியை ஏற்படுத்தவே அந்தக்காலத்தில் ஆலயங்கள் கட்டப் பட்டன. அந்தநோக்கத்தைப்புரிந்துகொள்ளாமல் கடந்த 40 ஆண்டுகளாக ஆலயங்களுக்கு எதிரான பிரச்சாரத் தைச் செய்ததன்பலன் இன்று பயபக்தியில்லாமல் குற்றங் கள் அதிகரித்துக்கொண்டிருப்பதைப்பார்கிறோம் " என்று தஞ்சையில் அறநிலைய அமைச்சர் ஆர். எம் வீரப்பன் கூறினர்.

— நன்றி. தினமலர் 18—7—'84.

## கனிவளம் காட்டும் கரையான்

புதுடில்லி, ஜூலை 18 – கனிவளங்களைக் கண்டுபிடிக்க எத்தனையோ நவீன கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டுள் ளன. கனிவளங்களைக் கண்டுபிடிக்கக் கரையான் புற்றுக் கள் உதவும் என்பது தற்போது தெரியவந்துள்ளது.

திருப்பதி ஸ்ரீவெங்கடேசுவராபல்கலைக்கழக நிலவியல் துறைநடத்தியசோதனைகள்மூலம் இதுபற்றிதெரியவந்தது.

கனிவளத்திற்கும் கரையான் புற்றுக்கும் உள்ள தொடர்பை இ. ஏ. வி. பிரசாத், எம். விஜயசாரதி ஆகிய இருநிபுணர்கள் ஆராய்ந்தனர்.

குரோமியம் வனடியம், தாமிரத் தாதுக்கள் கிடைக்கும் பகுதிகளில் ஆராய்ச்சி செய்தனர்.

அப்பகுதிகளில் உள்ள கரையான் புற்றுக்களில் உள்ள மண்ணில் மேற்கண்ட தாதுக்கள் செறிவாக இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. பூமிக்கு அடியிலுள்ள தாதுப் பொருட்களிலிருந்து குறிப்பிட்ட உலோகத்தைப் பிரித்துப் புற்றில்சேர்க்கும் " தொழில் நுட்பத்தைக் " கரையான்கள் கற்றுவைத்துள்ளன என்று யூகிக்கப்படு கிறது. எனவே கரையான் புற்றுக்களை ஆராய்வதால் அப்பகுதியிலுள்ள கனிவள வாய்ப்பு உண்மை புலனாகும் என்று கருதப்படுகிறது.

— நன்றி. தினமணி 19—7—84.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணியின் திருக்கயிலாய தரிசன நினைவு

வெள்ளிவிழாவில் 28-7-84



தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்

ஸ்ரீ கயிலாயநாதருக்கு வழிபாடு நிகழ்த்தி

சிதம்பரம் திரு. பு. ர. சுவாமிநாதன் M. A., L. T., அவர்கட்கு

" சிவநெறிச்செல்வர் " என்னும் பட்டம் வழங்கிப்

பொன்னுடை போர்த்தியும்,

சிதம்பரம் திருமுறைக்கலாநிதி

திரு. மு. கனகசபை பிள்ளை அவர்கட்குப்

பொன்னுடை போர்த்தியும் ஆசீர்வதித்தல்

# குருமணியின் அருள்மொழி

## அருளாளர்கள்

உலகம் இயங்குவதும் நாடு கொழிப்பதும் அருளாளர்களால்தான். அவர்கள் அதிகம்பேர் இல்லையாயினும் ஒருசிலர் இருந்தாலே அந்த உலகம் உய்யும். அவர்கள் இல்லையாயின் அந்த உலகம் சீரழிந்துசிதைந்து மண்ணோடு மண்ணாய் மறைந்துவிடும்

⁂

**கடிதம்:**

சைவசித்தாந்தக்கலாநிதி
கி. லக்ஷ்மணன்.

சென்னை,
26—5—84.

சைவசித்தாந்த வளர்ச்சியின் பொருட்டு உலகளாவிய நிலையில் கருத்தரங்கு ஒன்றை நடத்துவதற்குச் சிந்தித்து அதனைப் பலவிதத்திலும் மிகுந்தபயனுள்ளவகையில் சிறப்பாக நடத்தி நிறைவேற்றிய ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை மீண்டும் மீண்டும் பாராட்டி நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

அவ்விழாவில் என்னையும் பட்டமளித்துப் பாராட்டிய தங்கள் பெருங்கருணையைப் போற்றுகிறேன்.

கருத்தரங்கின் மூன்று நாட்களும் ஆன்மீகத்துறையில் தவப் பொழுதாக அமைந்தது பெரிதும் மகிழ்ச்சியையும் மனநிறைவையும் தருகிறது.

பேச்சுக்கள் மூலமும், ஆய்வுக்கட்டுரைகள் மூலமும் பல புதிய கருத்துக்களை அறியவும் சிந்திக்கவும் அரிய வாய்ப்புக்கள் கிடைத்தன. சைவசித்தாந்தத்தில் ஆழ்ந்த அறிவுடைய அறிஞர் பலரைச் சந்திக்க வாய்ப்புக் கிடைத்தது.

தருமையில் தாங்கள் நிறுவவுள்ள வரலாற்று முக்கியத்துவமுள்ள சைவசித்தாந்த ஆய்வுமையம் படிப்படியாக வளர்ந்து நீண்டு நிலைத்து நிலையான அரிய பல பணிகளைச்செய்து விழுமிய பயன்களைச் சைவ உலகிற்கு வழங்க இறைவன் திருவருளை வேண்டுகிறேன்.

---

## தருமையாதீனம் அனைத்துலக சைவசித்தாந்த முதற் கருத்தரங்கம்

# தெய்விகக் கலைக்கண்காட்சித் திறப்புரை

**திரு. கு. ஆளுடையபிள்ளை ஐ. ஏ. எஸ்.**

ஆணையர், இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை, தமிழ்நாடு அரசு

அனைத்துலக சைவசித்தாந்த முதல் கருத்தரங்கத்தினை யொட்டிச் சீரிய கலைக் கண்காட்சியொன்றினை ஏற்பாடு செய்து அதனைத்திறக்கும் பணியினை எனக்களித்த தருமையாதீன குருமகாசந்நிதானம் அவர்களுக்கும் இன்றைய மாலை நிகழ்ச்சி களில் சிறப்புப் பங்கேற்கும் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் அவர்கட்கும் மற்றும் இங்குக் குழுமியுள்ள அறிஞர் பெருமக்களுக்கும் என் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கி றேன்.

சைவசித்தாந்தம் சிவபரம்பொருளின் முழுமுதற்றன்மை யைக் குறித்த சித்தாந்தங்களை நன்கு விளக்குவது. இந்த தத்துவக் கொள்கையானது இந்தியநாட்டிலுள்ள சமயக் கொள்கைகளுக்கெல்லாம் தலை சிறந்தது என டாக்டர் போப் கூறியுள்ளார். ரெவரண்ட் கௌடி அவர்கள் சமய ஆராய்ச்சித் துறையிலும், கொள்கை – வாழ்க்கை என்பனவற்றின் வெளிப் பாட்டு முறையிலும் மிகமிகச் சிறந்த தொன்மையாகத் தென் இந்தியா பெற்றிருப்பது சைவ சித்தாந்தமேயாகும் என்று தெளிவுபடக் கூறியுள்ளார். இவ்வளவு சிறந்த சமயக் கொள் கையினை மக்கள் அறிந்து, அதன்வழி நின்று உய்ய மேற்கொள் ளப்படும் முயற்சிகள் பெரும் பாராட்டுக்குரியன.

அறிவியல் கண்ணோட்டத்தோடும் ஆராய்ச்சி நோக்கத் தோடும் செயல்படும் மக்கள் ஆராய்தற்கு உரிய பொருள்கள் மூன்று; அவை கடவுள், உயிர்கள், உலகம் என்பனவாகும். உயிர்கள் அறிவுள்ளவை. உலகம் அறிவில்லாதது. உலகிலுள்ள பொருள்களை உயிர்கள் ஓரளவிற்கு இயக்குகின்றன. ஆயினும், உயிர்களின் அறிவு மிகச் சுருக்கமானதேயாகும். அந்தப் பொருள்களைத் தனித்தனியே சுட்டியறியும் சிற்றறிவேயாகும். அப்படிச் சிறிது அறிவதும் கூட, முற்றறிவை இயல்பாகப் படைத்துள்ள பரம்பொருள் ஒன்று அறிவித்தால்தான் உயிர்கள் அறிகின்றன என்பதும் பெரியதோர் உண்மை. அறிவற்ற பொருள்களைச் 'சடம்' என்று பெரியோர் கூறுவர். இவற்றையெல்லாம் இயக்கும் மேலான பொருள் கடவுள்.

சித்தாந்த சாத்திரங்கள் கடவுளைப் பதி என்றும், உயிர்களைப் பசு என்றும், உலகத்தைப் பாசமென்றும் கூறும். எல்லா ஆராய்ச்சிகளும் இந்த மூன்றுக்குள் அடங்கும். இவைபற்றிய அறிவை வளர்த்தல் மக்கள் ஆன்மநல முன்னேற்றத்திற்கு இன்றியமையாதது. இம்மூன்று பொருள்களும் ஒன்ருல் ஒன்று தோற்றுவிக்கப் படாமல் என்றும் உள்ள உண்மைப் பொருள்கள்.

எல்லாம் வல்ல பரசிவப் பொருள் உலகைப் படைத்தது. உயிர்களை மேல் நிலைக்கு உயர்த்துதற்காகவே. ஆகவே அது உலகங்கட்குள்ளும் உயிர்கட்குள்ளும் பிரியாமல் நின்று அவற்றை இயக்கி வருகிறது. தாஞக இயங்கமாட்டாத சடப்பிர பஞ்சத்தை ஒரு முறைப்படி ஏதோ ஒரு சக்தி இயக்குவதையும் அதனல் உயிர்கள் படிப்படியாகத் தடைகளினின்றும் விடு பட்டுப் பேரானந்தப் பெருநிலை அடைவதையும் உணர்கின் ரேம். இப்படியுள்ள பரம்பொருள் ஒன்றேதான். அப்பொருள் உருவம், அருவம், குணம் குறி இவைகளுக்கெல்லாம் அப்பாற் பட்டது. இன்ன தன்மையன் என்றறியொண்ணு எம்மான் என்று சுந்தரரும், மூவரும் முப்பத்து மூவரும், மற்றைத்தேவரும் காணுச் சிவபெருமான் என்று மாணிக்கவாசகரும் குறிக்கும் இப்பரம் பொருள் அன்பே உருவாய், பெருங்கருணைத் தடங் கடலாய், ஆன்மாக்கள் தமது வாக்கு, மன முயற்சியாலே செல்லுதற்கு அரிதாய் ஆனல் அவையாவும் முடிவிற் சென்று கதியாய் உள்ள நுண்பொருளாயுள்ளது.

ஆன்மாக்கள் எண்ணில்லாதவை, என்றும் உள்ளவை, எவராலும் படைப்படாதவை; சிவத்திற்கும் பாசத்திற்கும் வேரு னவை. இவற்றிற்கு இரண்டு சிறப்பியல்புகள் உள்ளன. ஒன்று பற்றுக்கோடின்றிநில்லாமை, அதாவதுபாசத்தையாவதுஅல்லது பதியையாவது பற்றியே ஆன்மா நிற்கும். மற்றும் சார்ந்ததன் வண்ணமாதல். எதைச்சார்ந்து ஆன்மா நிற்கின்றதோ அதனேடு கலந்து அதன் தன்மையைத் தான் பெற்று இயங்கும்.

பாசம், ஆணவம்-மாயை - கன்மம் என மூவகைப்படும். இவற்றில் ஆணவந்தான் மூலமலம். தான்ஒன்றேயாய் அனேக சக்திகளையுடையதாயிருப்பது. உயிர்களின் அறிவினை விளங்க வொட்டாமல் அதற்குத் தடையாயிருப்பது; தன்னையும் காட் டாமல் பிறபொருளையும் காண ஒட்டாமல் மறைத்து நிற்பது.

மாயை என்பது உலகம் தன்னிடம் ஒடுங்குதற்கும் தோன்றுதற்கும் காரணமாயிருப்பதால் மாயையிலிருந்துதான்

36 தத்துவங்கள் இறைவன் சக்தியால் தோற்றுவிக்கப் படுகின்றன. மாயையின் துணை கொண்டே அதனையும் ஆணவ மலத்தையும் தாண்டவேண்டும் என்பது இறைவன்வகுத்துள்ள உபாயம்.

கன்மம்என்பது நாம்பெறும் பிறவிகளின் இயல்பைத் திடப் படுத்தி நாலாவிதமான இன்பதுன்பங்களை விதிமுறைப்படி ஊட்டி வைக்கும். ஒவ்வொரு கன்மமும் தன் தன் பயனைத்தந்தே தீரும். நன்றியுணர்வுடன் இறைவனை எண்ணி அன்புடன் வழி பட்டுப்பேரின்பம் பெறச் செயல்பட வேண்டும்.

சைவசித்தாந்தத்தின் சீரிய கொள்கைகளை மக்களிடையே பரப்பப் பல்வேறுசாதனக்களைக் கையாளவேண்டும். உயிர்கள் உய்ய வேண்டுமென்ற பெருநோக்கு இச் சித்தாந்தத்தின்கண் மேலோங்கி நிற்பதனைக் கண்காட்சி, ஒலி, ஒளிக் காட்சி, தொலைக் காட்சி போன்ற சாதனங்கள் வழியும் அறிவுறுத்திச் சிவத்தொண்டு செய்யலாம் என்று கூறி வாய்ப்புக்கு நன்றிகூறி அமைகிறேன். வணக்கம்.



## குருமணியின் அருள்மொழி

### அகவாழ்க்கைக்கு அறநிலையங்கள்

மனித வாழ்க்கை இரண்டு கூறுகளை உடையது. ஒன்று அகவாழ்க்கை. மற்றொன்று புறவாழ்க்கை. புறவாழ்க்கை யின் பல்வேறு தேவைகளைப் பூர்த்திசெய்வதற்கே அரசும் அதன் முயற்சிகளும் அமைகின்றன. அதுபோல மக்களின் அகவாழ்க்கையினைச் செம்மைபடுத்தும் பெரும்பணி அற நிலையங்களுக்கும் ஆதீன திருமடங்களுக்கும் உண்டு.........

அமைதிக்கு வழி யாது என்பனபோன்ற உயிர்பற்றிய ஆன்மீகச் செய்திகளை—தத்துவகோட்பாடுகளை—மக்களுக்கு அறிவுறுத்தவும் அவர்கள் உள்ளத்தில் ஞான விளக்கினை ஏற்றவும் அறநிலையங்கள் பாடுபட்டுவருகின்றன.

# திருவருட்பாத் திரட்டு

( பொழிப்புரையுடன் )

**வித்துவான் திருமதி. ப. நீலா எம். ஏ.,**

( மலர் 43, இதழ் 8, பக்கம் 376 இன் தொடர்ச்சி. )

## 5. ஸ்ரீகாசி காலவைரவர் திருவருட்பா

உலகெங்கு முனதருண கிரணமிடு வடிவமோ(டு)
உரக கங்கண கணபணம்
உமிழ்மணியும் உடைமணிக் கிண்கிணெனும் ஓசையும்
உயர்கருணை பொழிவதனமும்
இலகு சூலப்படையும் அறை தமருகப் பறையும்
எட்டியெறி வெம் பாசமும்
ஏற்குங் கபாலமுன் சேர்க்குங் கரங்களும்
இமையாத நயனங்களும்
நிலவைவிடு மிளநகையும் வடவையனல் முனையென
நெறித்த துஞ்சிச் சடையும்வெண்
ணீற்றினொளி யுங்கரிய கஞ்சுகமு மணிகண்ட
நீலமும் நிருவாணமுங்
கலகலென வருமுபய விருதுபரி புரமுமொளிர்
கழலிணையு மனதின் மறவேன்
காசியெனும் ஒருவார ணசிநக ரானந்த
கால வயிரவ நாதனே. 1

(பொ – ரை) காசியெனும் வாரணசி நகரிலுள்ள மகிழ்வு தரும் காலவயிரவப் பெருமானே! உலகெங்கும் சிவந்த ஒளியை விடுகின்ற உனது வடிவமோடு கங்கணமான பாம்பு உமிழ்ந்த மணியும், உடைமணியின் கிண்கிணெனும் ஒலியும், உயர்ந்த கருணை பொழியும் முகமண்டலமும், விளங்கு சூலப்படையும், ஒலிக்கும் உடுக்கையும், வீசியெறியும் கொடிய கயிறும், பலி ஏற்க உதவும் கபாலமேந்திய கைகளும், இமைத்தலில்லாக் கண்களும், நிலவொளி உமிழும் நகையும், வடவைத் தீக்கொழுந்துபோன்ற அடர்ந்த தலைச்சடையும், திருநீற்றொளி யும், கரியசட்டையும், நீலமணிக்கழுத்தும், ஆடையற்ற

திருமேனியும், கலகலவென ஒலிக்கும் இரண்டான புகழுடைய சிலம்பும், விளங்கும் கழல்களணி திருவடிகளையும் மனதில் மறக்கமாட்டேன்.

(கு - ரை) அருணம் - சிவப்பு. 'அருணம் புயத்துமென் சித்தாம் புயத்தும்' - (அபி - அந் - 58) உரகம் - பாம்பு 'விரகு பட வெப்பொழுதும் முரணமர் தொடக்கும்வலி உரகதுவசற் கொழிய அரசரி லெவர்க்குளதோ' (வில்லி. பார. 13. போர்-56) கங்கணம் - கையிலணியும் அணி. கணபணம் - கூட்டமான படம். வடவை - குதிரை முகத்தீகஞ்சுகம் - சட்டை 'காஞ்சுகி வன்கண் மாக்கள்' - (திருவிளை - கல்யாண 4.) விருது பரிபுரம் புகழுடைச் சிலம்பு 'விருதுகவி விதரண விநோதக் காரப் பெருமாளே' (திருப்பு - 158.) மூன்றுவது வரியில் அமைந்த முரண் அணி நோக்குக.

அருளெனுந் திரையெறியு மானந்த சலதிமெய்
 யழகொழுகு கருணைமேரு
அமுதமழை பொழிகின்ற ஒருபெரிய செம்மேகம்
 அறிவுதவு சிந்தாமணி
திருவினுக்கும் பெரிய செல்வங் கொடுத்துச்
 செழித்திடுங் கற்பகதரு
சிவானந்த வாழ்வுதவு சங்கநிதி பதுமநிதி
 தெய்வங்கள் சூடாமணி
தருணபரி பாகர்உள் மலதிமிர சங்கார
 சதகோடி சண்டபானு
சச்சிதானந்த வுபசாந்த ப்ரகாசந்
 தருங்கோடி சந்த்ரோதயங்
கருவெனும் வேலையைத் தூளிபட நின்றே
 கலக்கிவிடு மந்தாகினி
காசியெனும் ஒருவார ணசிநக ரானந்த
 கால வயிரவ நாதனே. 2

(பொ - ரை) அருளாகிய அலையெழும் ஆனந்தக்கடல், அழியாத அழகொழுகும் கருணைமலை, அமுதமாம் மழை பொழியும் பெருமை மிக்க செம்மேகம், அறிவுதவும் சிந்தாமணி திருமகளுக்கும் பெரிய செல்வம் தந்து செழித்திடும் கற்பகமரம், சிவானந்த வாழ்வுதரும் சங்கபதுமநிதி, தெய்வங்கள் தலையில் சூடும் சூடாமணி, செவ்வியுடையவர்களின் உள்ளத்தின்

ஆணவமலவிருளை அழிக்கும் கொடுங்கதிருடை நூறுகோடி சூரியன், உண்மை அறிவானந்தத்துள் அடங்கிய ஒளிதரும் கோடி சந்திர உதயம், கர்ப்பமெனும் (பிறவியெனும்) கடலைத் தூளிபடக் கலக்கிடும் கங்கையென நீ விளங்குகிறாய் - காசி நகரிலுள்ள கால வயிரவ நாதனே.

(கு - ரை) இப்பாடலில் உருவக அணி அதிகம் பயின்றுள்ளது. இதனைக் 'கருத்துடையடை கொளியணி' - எனலாம். அமுதமழை பொழியும் செம்மேகம் - இல்பொருள். பைரவர் - பரவ - என்ற மூன்றெழுத்தும் படைத்தல் காத்தல் அழித்தல் - தொழில்களை நடத்துபவன் என்பதன் அடையாளம். தூளி - அளவுகடந்த வெள்ளப்பெருக்கு கடலில் கலக்கும்போது வருணிக்கவியலாத அட்டகாசமான கலக்கம் ஏற்படுமே அப்படித் துளிகள் தெறிக்க கடலில் கலக்கும் கங்கையை உவமை கூறினர். பிறவிக்கடல் துளிபடக்கலக்கும் கங்கை நீதான் என்று வயிரவரை வருணித்தார். துளி - தூளி எனவந்தது.

ஆனந்த நடன தேசோரூப வயிரவன்
அடக்கியிடு கீழண்டமேல்
அண்டரண்டங்கள் நவகண்டங்கள் கிடுகிடென
ஆர்ப்பரிக்கும் வயிரவன்
தேனுலவு பங்கயன் தலைகிள்ளி யுதிரஞ்
சிதறச்செய் நகவயிரவன்
செங்கண்மா லோர்கோடி முடியிடறி வடுவிடுஞ்
செயபதும பதவயிரவன்
ஊனந்து சூலந்திரிக்கும் வயிரவன் நெடிய
யுகமுடிவி லண்ட மெல்லாம்
ஒருகவளமாய் விழுங்கிப் பின்னுமிழ்ந்திடும்
உதர வயிரவன் வெள்ளையாங்
கானந்தனிற் பூதகணமோடு விளையாடு
கருணைதரு மொருவயிரவன்
காசியெனும் ஒருவார ணசிநக ரானந்த
கால வயிரவ நாதனே. 3

(பொ - ரை) ஆனந்தநடனமிடும் ஒளிநிறை வயிரவன், அடுக்காகவுள்ள கீழ்மேல் அண்டங்கள், நவகண்டங்கள் கிடுகிடென நடுங்க ஆர்ப்பரிக்கும் வயிரவன், தேன்நிறை தாமரைப் பூவிலுள்ள பிரமன் தலைகிள்ளி உதிரத்தைச் சிதறிடும்

நகமுடை வயிரவன், சிவந்த கண்ணுடைய கோடி திருமால்களின் முடிகளையிடறியதால் ஏற்பட்ட வடுவுள்ள தாமரை போலும் திருவடிகளுடை வயிரவன், மாமிசம் நிறைந்த சூலாயுதத்தைச் சுற்றும் வயிரவன், நீண்டயுகமுடிவில் எல்லா அண்டங்களையும் ஒருகவளமாய் விழுங்கிப் பின்னுமிழ்ந்திடும் வயிறுடை வயிரவன், வெள்ளைக் காடதனில் (சுடுகாடு - எலும்பு சாம்பல் நிறைந்திருக்க - வெண்மைத் தோற்றம் காட்டும்) பூதக்கூட்டத்துடன் விளையாடும் கருணைதருமொரு வயிரவனென்று விளங்குகின்ற பெருமையுடைக் கால வயிரவ நாதன் இவர். மாலும் பிறதேவர்களும் அழியக்கூடியவர்களே

(கு - ரை) பங்கயனும் செங்கண்மாலும் சிவனால் முடிவு பெறுபவர்களே.

'கமலத்தோன் தன் சிரந்தாங்கு கையானை' (6-69-6.)

'யாதோர் தேவ ரெனப்படு வார்க் கெலாம்
மாதே வன்னலால் தேவர் மற்றில்லையே' (5-100-4)

'நூறுகோடி பிரமர்கள் நொந்தினர் ஆறுகோடி நாரணர்
அங்ஙனே...ஈறிலாதவன் ஈசன் ஒருவனே' (அப்பர்-குறுந்)

(கு - ரை) ஊனந்து - ஊன்வளரும். 'ஊனேறு வேலின் உருவேறு கண்ணி ஒளியேறு கொண்ட ஒருவன்' (2-224-6.) 'ஊனக மாமழுச்சூலம் பாடி' (திருவாசகம். பொற்சுண்: - 17.) கவளம் - ஒருவாயுணவு. சிறப்பாக யானையின் உணவை இப்படிக் குறிப்பர். 'காய் நெல்லறுத்துக் கவளம் கொளினே மாநிறைவில்லதும் பன்னாட்காகும்' - (புறநா - 184) பிரமனின் தலைகிள்ளியது - காஞ்சிபுராணம் வயிரவேச படலம் காட்டும். சிவனம்சமான வயிரவன்-தன்முன்வந்தபோது செருக்குடன்வா என்மகனே - எனப் பிரமன் கூறியதால் - நகத்தால் அவன் தலையைக்கிள்ளினன் என்பதை அப்பர் பெருமானும் கூறுகிறார். 'அறத்தில் நில்லாப் - பிரமன் தன் சிரமொன்றைக் கரம் ஒன்றினல் கொய்தானை' - (6 - 66 - 8) ஆதிக்கண் - 'நான் முகத்தி லொன்று சென்று அல்லாத சொல்லுரைக்கத் தன்கை வாளால் சேதித்த திருவடி' (6 - 20 - 1) வாள் - நகம். பூத கணமோடு விளையாடல் - 'பெண்ணோர் கூறினர் பேயுடன் ஆடுவர்.' (3-43-6.) பைரவபேதங்கள் எட்டு;- மகாவைரவர், உக்கிரவைரவர், சண்டனவைரவர், குரோதவைரர், உன்மத்த வைரவர், கபாலவைரவர், பீஷணவைரவர், ஸாஹாரவைரவர் (விவேக சிந்தாமணி) என்று காணப்படுகிறது.

(தொடரும்)

# கேதாரம் நோக்கி....!

திரு. வி. ஆறுமுகம் ஐ. ஏ. எஸ். (ஓய்வு)

( மலர் 43, இதழ் 7, பக்கம் 336 இன் தொடர்ச்சி. )

## 11. பத்ரிநாத் பயணம்

செப்டம்பர் 27 ஆம்தேதி, செவ்வாய்க்கிழமை. பத்ரிநாத் பயணம் தொடங்கினோம். ருத்ரப்பிரயாகிலிருந்து 160 கி. மீ. தூரத்தில் பத்ரிநாத் அமைந்துள்ளது. ஜோஷிமட் என்ற இடத்திலிருந்து பத்ரிவரை சாலை குறுகலாக இருக்கிறது. குறிப்பிட்ட சில நேரங்களில் மட்டும்தான் பேருந்துகள் செல்லமுடியும். அப்போதும்கூட வாகனங்களை ஒருவழியில், அதாவது ஜோஷிமட்டிற்கும் போகவர அனுமதிக்கிறார்கள். மாலை 4மணிக்குமேல் வாகனங்கள் மேலே செல்லக்கூடாது என்பது விதி.

நாங்கள் காலை 7 மணிக்கெல்லாம் ருத்ரப்பிரயாகிலிருந்து புறப்பட்டோம். நல்ல காலநிலை. 30 கி. மீ. சென்றதும் கர்ணப்பிரயாக் என்ற ஊர். இவ்விடத்தில் பிண்டாரி என்ற ஒரு பனிக்கட்டி ஆறு உள்ளது. பிண்டாரிநதி அலகநந்தாவுடன் சங்கமமாகிறது. இவ்விடத்தில் உமாதேவி திருக்கோயில் உள்ளது.

அடுத்து 22 கி. மீ. சென்றதும் நந்திப்பிரயாக். இது இயற்கை எழில் கொழிக்கும் ஊர்! பனிக்கட்டியால் மூடப்பட்ட மலைச் சிகரங்கள் – வெள்ளிப்பனிமலைகள் – மனத்திற்குக் கிளுகிளுப்பை ஊட்டுகின்றன.

காலை மணி 10. பிப்லிகோட் போய்ச்சேர்ந்தோம் ஊரைச் சுற்றிலும் பசுமரக்காடுகள்; மலைச் சரிவுகளில் கோதுமைப் பயிர்கள்; சூரிய ஒளி, பனிக்கட்டியுடன் கூடிய மலையில்பட்டு தகதக எனக் காட்சிதந்தது.

பத்ரிநாத்துக்குப் போகும் வழியில் மிக முக்கியமான நகரம் ஜோஷிமட். பகல் 12மணியளவில் அங்குச்சென்றுசேர்ந்தோம். ஜோஷிமட்டில் ஆதிசங்கரரால்முதல்முதல் தாபிக்கப்பட்டதாகக் கூறப்படும் மடம் ஒன்று உள்ளது. நேரம் கிடைத்தமையால் அதையும் ஸ்ரீ நரசிம்மசுவாமி திருக்கோயிலையும் பார்த்தோம்.

அன்று கிருத்திகை; ஸ்ரீ முத்துக்குமாரப்பெருமானையும் தருமை யாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தையும் மனத்தில்நினைத்து வழிபட்டோம். பிற்பகல் 1-45 க்குக் கயிலைமாமுனிவர் எங்களுக்கு அளித்த பழங்களை உண்டு பயணம் தொடர்ந்தோம்.

வழியில் விஷ்ணுப்பிரயாக், கோவிந்தகட் என்னும் சிற்றூர்கள் உள்ளன. கோவிந்தகட்டிலிருந்து ஒரு ஒற்றையடிப்பாதை செல்கிறது. அவ்வழியில் 15 கி. மீ. சென்றால் கங்காரியா (கோவிந்தம்) என்றஇடம்உள்ளது. அங்கே இந்த ஒற்றையடிப் பாதை இரண்டாகப்பிரிகிறது. அதன் ஒரு வழியில் சென்றால் 4 கி. மீ. தூரத்தில் பலநிறப் பூக்கள் பூத்துக் குலுங்கும் பள்ளத் தாக்கிற்கு (valley of flowers) செல்லலாம். மற்றொரு பாதையில் 5 கி. மீ. சென்றால் பனிக்கட்டி நிறைந்த ஏரி எனப்பொருள்படும் ஹேம் குண்டு என்னும் இடத்தை அடையலாம்.

ஹேம்குண்டு என்ற இப்பகுதியில் சீக்கியர் குருத்துவாராவும் லட்சுமணன் கோயிலும் உள்ளன. இப்பகுதியைச் சுற்றி ஏழு பனிமலைச் சிகரங்கள் உள்ளன. நடுவில் பளிங்கு போன்ற நீருடன் தாமரை பூத்துக்காட்சிதரும் சுனை அல்லது ஏரி ஒன்று உள்ளது; பச்சைப்புல் வெளிகள் உள்ளன. இயற்கை அரசோச்சும் பகுதி அது!

மார்க்கண்ட புராணத்தில் வரும் துர்க்கா சப்த சஷ்டிஎன்ற முனிவர் இங்குத்தவம் செய்தார் என்றும் அவரே மறுபிறவியில் குருகோவிந்த சிங்காக அவதரித்துச் சீக்கிய மதத்தை நிறுவி வளர்த்தார் என்றும் சொல்கிறார்கள். நாங்கள் பத்ரிபோனபோது 14 தனிபஸ்களில் ஏறத்தாழ 400 சீக்கியர்கள் அந்த இடத்திற்கு யாத்திரையாக வந்திருந்தனர்.

பூப்பள்ளத்தாக்கு என்று குறிப்பிட்ட பகுதியில் பலநிறப் பூக்கள் பூத்துக்குலுங்குகின்றன என்பர். அலகநந்தா நதியிலுள்ள தொங்கு பாலத்தின் வழியாக அதன் மறுகரைக்குச் செல்லவேண்டும்; நாங்கள் நேரமில்லாததால் அங்குப்போகவில்லை. பனிமலைப் பயணத்தில் நேரமும் காலமும் இடம் கொடுத்தால் இயற்கை விருந்தை நிரம்பப் பெறமுடியும்!

கோவிந்த கட்டிலிருந்து அனுமன் சட்டி வழியாகச் சென்றோம். அங்கிருந்து 7 கி.மீ. பயணம்செய்துமாலை 4மணிக்கு பத்ரிநாத் அடைந்தோம். பத்ரிநாத் அடையுமுன் 5. கி. மீ. தொலைவிலேயே அந்தப் பனிமலைக் காட்சி மனத்திற்கு ரம்யமாகத் தெரிகிறது கையிலைக்காட்சி போல! இதனைக் கயிலைமாமுனிவர் காசிவாசி சுவாமிகள் தம் அனுபவ வெளிப்பாடாக

எங்களுக்கு அருளினார்கள். பத்ரியிலிருந்து 25 கி. மீ. தொலைவில் மானேகண்வாய் சமீபத்தில்தான் 'கயிலை' உள்ளது. ஆனால் சரியான பாதை இல்லை.

பத்ரியில் தங்குவது என்பது பிரச்சனையில்லை; தங்கும்விடுதி வசதிகள் உள்ளன. நாங்கள் கோவிலுக்குப் பக்கத்திலுள்ள வெந்நீர் ஊற்றில் நீராடி நேரே கோவிலுக்குச் சென்றோம்! ஆரத்தி தரிசனம் கிடைத்தது, அன்று இரவு நிலவு ஒளியில் பனிமலைக் காட்சி இனிமையாக இருந்தது; ஆனால் கொடிய குளிர்! "நாளை காலை 4 மணிக்கே எழுந்து 5 மணிக்குக் திருக்கோயிலில் நடக்கும் அபிஷேகத்தைக் காண அருள வேண்டும்" என்று பிரார்த்தனை செய்தவாறே உறங்கவும் மறுநாள் பொழுது காலை 4 மணியானதும் ஒன்றாய் இருந்தது. கண் விழித்தோம்! வெந்நீர்க் குண்டத்தில் குளித்து விட்டு 5 மணிக்குக் கோயிலை அடைந்தோம். அபிஷேகம் செய்ய ரு 251/ கட்ட வேண்டும். இரண்டு பேரைமட்டும் அனுமதிப் பார்கள். நாங்கள் 7 அபிஷேகத்திற்குப் பணம் கட்டி விட்டு 14 பேர் உள்ளே சென்று அபிஷேகம் பார்த்தோம்.

கோயிலில்அபிஷேகம்செய்பவர்நம்பூதிரி. கோட்போட்டுக் கொண்டுள்ளார். கோட்டைக் கழற்றுமலே அபிஷேகப் பணி செய்கிறார். அபிஷேக அலங்காரம் சிறப்பாக உள்ளது. அபிஷேகம் செய்த எண்ணெய், அத்தர், சந்தனம் முதலிய வற்றைக் கிண்ணங்களில் கொண்டு வந்து அபிஷேகதாரர் களிடம் கொடுக்கிறார். சந்தன அலங்காரம் பாதம் முதலாகக் கழுத்து வரையிலாகச் செய்யப்படுகிறது. சந்தன அலங்காரம் முடிந்து புஷ்பாலங்காரமும் அடுத்து ஆபரணம் அணிவித்தலும் நிகழ்கின்றன. அந்த அலங்காரக் காட்சி என்றும் மனத்தை விட்டு நீங்காது! அவ்வளவு அழகு.

குளிர் அதிகமாக இருப்பதால் கேதாரம், பத்ரிநாத் இரண்டு இடங்களிலும் பக்தர்கள் சுவெட்டர், கோட், முழுக்கால் சட்டை அணிந்தே வழிபடுகின்றனர்; பூசாரியும் அப்படித் தானே! இறைவழிபாடு செய்த நிம்மதி அங்கே கிடைத்து விடுகிறது; ஆனால் ஆசாரம்...? காலநிலை அதற்குச் சற்று இடைஞ்சலாகத்தான் இருக்கிறது! "நாம் புண்ணிய பூமிக்கு வந்துள்ளோம்; ஆசாரங்கள் முடிந்த அளவு கடைப்பிடிக்கப் பட்டால் போதும்" என்று கயிலைமா முனிவர் முன்னமே எங்களுக்கு அறிவுரை கூறியிருந்தார்கள். அது பெரிதும் உண்மை என்பதை நாங்கள் உணர்ந்தோம்! (தொடரும்)

# தேன்! தேன்! தேன்!

[டாக்டர் திரு. ஆர். தியாகராஜன் எல். ஐ. எம். அவர்கள், சென்னை இறையாட்சி இந்திய மருத்துவக் கல்லூரி, சித்தமருத்துவ உதவிப்பேராசிரியராகப் பணியாற்றியவர்கள். அவரது நூலான 'குணபாடம்' (Materia Madica) இரண்டு மூன்றும் பகுதிகளிலிருந்து தேனைப்பற்றிய இக் கட்டுரை தொகுக்கப்பட்டது. முதற்பதிப்பு 1952]

தேன் நமக்கு எப்படிக்கிடைக்கிறது? தெரியுமா உங்களுக்கு? மரம், செடி, கொடிகளில் உள்ள மலர்களில் அமைந்திருக்கும் மகரந்த அமிர்தத்தைத் தேனீக்கள் பருகுகின்றன. அதைத் தம் உடலிலுள்ள தேன்பையில் சேர்த்துக் கொள்ளுகின்றன. அப்போது அப்பையிலிருக்கும் மகரந்த அமிர்தம் ஒரு விதமான மாறுதலை அடைகின்றது. இம்மாற்றம் அடைந்த அப்பொருளைத் தேனீக்கள் தேன் கூட்டின் அடையிலுள்ள அறைகளில் உமிழ்ந்து சேகரித்து வைக்கின்றன. இப்பொருளைத்தான் இன்சுவைசான்ற இத்திரவத்தைத்தான் நாம் தேன் என்று அழைக்கிறோம்.

தேன் சேகரிப்போர்க்கு இத்தேனடைகளை முட்டை, புழு, தேனீ, மகரந்தப்பொடி முதலியவற்றுடன் சேர்த்தே பிழிந்து விற்பனைக்குச் செலுத்துகின்றனர். அந்தத்தேன் அசுத்தமுடைய தாய் - சுகாகார முறைக்குப் பொருந்தாத பொருளாய் ஆகி விடுகிறது. குடகுநாட்டில் குறிப்பிடத்தக்கமுறையில் தேனைச் சேகரிக்கின்றனர். அவர்கள் பானைகளைத் துவாரமிட்டு, இலவங்கப்பட்டை, வாசனை, மெழுகு முதலியவற்றைப் பூசி ஒதுக்கமான ஓர் இடத்தில் வைத்துத் தேனீக்களை நுழையப் பழக்கித் தேனைச் சேகரிக்கிறார்கள், கூடுகளிலிருந்து ஒழுகும் பொழுது சேகரித்தெடுத்த சுத்தமான தேனே சிறந்ததாகும்.

தேன் கூட்டிலிருந்து தூயமுறையில் சேகரித்த தேன், இனிப்பாகவும், தெளிவாகவும், இளமஞ்சள் நிறம் கொண்ட

தாகவும் இருக்கும். பூக்களின் இனத்திற்குத் தக்கவாறும், கால தேசத்திற்கு ஏற்றவாறும், தேனின் மணம், சுவை, குணம், நிறம் முதலியன மாறி வேறுபடும்.

தேனில் நமது உடலுக்குத் தேவையான இனிப்புஉணுச் சத்து, உலோகச் சத்துக்கள், வைட்டமின் போன்ற எல்லாவிதச் சத்துக்களும் சிறுசிறு அளவில் பொருந்தி இருப்பதாகத் தற்கால விஞ்ஞானிகள் கண்டறிந்து கூறுகிறுர்கள். வைத்திய நூல்களில் தேன் 12நாழிகைகளில் செரியானமாகி விடுவதாகச் செப்பப் படுகிறது. தேனை மேனுட்டார் சிறந்த ஆகாரமாகத் தேகபலத் திற்கும் ஆரோக்கியத்திற்காகவும் உட்கொண்டு வருகின்றனர்.

தேனினிடத்து, மலம் இளக்கும் சக்தியுண்டு. அஃது, அழுகல்பொருள்களையும் கோழையையும்|வெளியேற்றவல்லது. பசியை உண்டாக்கும். தூக்கத்தை ஏற்படுத்தும்; இப்படித் தேனிடத்துப் பல செய்கைகள் உள. தேன் குழந்தைகளுக்கு மிகவும் நல்லது.

தேனில் ஐந்து வகையுண்டு. 1. மலைத்தேன், 2 கொம்புத் தேன், 3. மரப்பொந்துத்தேன், 4 புற்றுத்தேன், 5 மனைத்தேன் எனஐவகைப்படும். ஒவ்வொரு விதமான தேனுக்கும்ஒவ்வொரு மருத்துவசக்திஉண்டு என மருத்துவமணிகள் உரைக்கின்றனர்.

புதுத்தேனினுல் நிறைந்த ஆயுளும், உடல் வெப்பமும், பிரகாசமும் உண்டாகும். புளிப்பும் இனிப்பும் கலந்த பழைய தேனைது வாதரோகக் கூட்டத்தையும், வயிற்று எரிச்சலையும், வாதமூலரோகத்தையும் உண்டாக்கும். அன்றியும் புளித்துப் போன பழையதேன் மருந்தினது நற்குணங்களை மாற்றிப் பாழ் படுத்தவல்லது.

தேன் இலேக்கியம், மதுரசம், மெழுகு, கட்டு, கண்மை போன்ற மருந்துகள் செய்வதற்குப் பயன்படுகிறது. பஸ்பம், செந்தூரம், சூரணம், மாத்திரை, குடிநீர் போன்றவை கட்குத் தேன் ஓர் அரிய துணை மருந்தாகும். இதுதேகத்தை நன்னிலையில் வைத்து வாதம் முதலிய முக்குற்றங்களையும் போக்குகிறது என்பர் வைத்தியநூலார். தேனுடன், எலுமிச்சம்பழரசம் சமநிலை யில் கூட்டிக் குறைந்த அளவில் கொடுத்துவரக் குழந்தைகளின் இருமல் குறையும்.

தேனும் தண்ணீரும் கலந்து உட்கொள்ளவேண்டும் என்று துணியுமுன்னேயே, நாளான சீதசுரம் பயப்பட்டு ஓடும் என நூலில் கூறப்பட்டுள்ளது.

தேனைச் சூடுள்ள பார்லிஅரிசிக் கஞ்சித் தெளிநீருடன் கலந்து கொடுப்பதுண்டு. இதனால் மலபந்தம், செரியாமை, நீர்க்கோவை, இருமல், தொண்டைப்புண், நுரையீரலைப்பற்றிய பிணிகள் நீங்கி மறையும். கபவாத சுரத்தினால் வருந்தும் கடும் நோயினர்க்கும், இளைத்த உடம்பினர்க்கும் இருதயத்தைப் பலப்படுத்த தேனை வழங்கிவரலாம். வயோதிகர்களுக்குக் காணும் கோழையை அகற்றி, உடலில் வெப்பத்தை உண்டு பண்ணுவதற்கும், சக்தியை அதிகப்படுத்துவதற்கும் தேனைக் கொடுத்து வரலாம். மதுமேக நோய்க்காக வழங்கப்படும் மருந்துகளுள் தேனும் ஒரு முக்கியப் பொருளாகச் சேர்க்கப் பட்டிருக்கிறது. தேனுடன் சுண்ணும்பைக்கூட்டிக்குழைத்து, பழுப்பதற்காகக் கட்டிகளின்மீதும், தலைவலிக்குத் தலைப் பொட்டிலும், வயிற்றுவலிக்குக் கொப்பூழைச்சுற்றிலும் போட்டு வருவது நாட்டு வழக்கமாகும்.

வாய் கொப்புளிக்க உபயோகிக்கும் குடிநீர்களுடன் தேன் சேர்ப்பதுண்டு. இது கோழையை நீக்கும். முலைக்காம்பின் புண்ணிற்கும், பால்கட்டிற்கும் தாய்மார்கள் தேனை வெளிப் பிரயோகமாக உபயோகிப்பதுண்டு. வயிற்று விக்கத்திற்கும் அதன்மீது தேனைத் தேய்த்துவர வலிகுறைந்து விக்கம்வாங்கும். தீப்புண் தேன்போட்டு வரச் சீக்கிரத்தில் ஆறும். முகத்தில்கருங் கோடு உள்ள இடத்திலும், புள்ளிகள் உள்ள இடங்களிலும், தேனைத் தடவி வெந்நீரால் கழுவினால் நல்ல வசீகரம் உண்டாகும்.

தேன் உறைந்து கற்கண்டாய் மாறுவதுண்டு. அக்கற் கண்டினால் கண்ணில் படுகின்ற துர்மாமிசப் படலம் (Cataract) சுரம், கபநோய், வாதநோய் முதலியன நீங்கும். இன்னும், அதிக பசியையும் இசைப்பாட்டிற்கு உரிய தொனியையும் தேன் உண்டுபண்ணவல்லது. இதனை,

"தேனில் பிறந்த செழுங்கண்டால் கண்விழிக்குள்
ஊனில் படர்படலம் ஒடுடுங்காண் — கானத்திற்கு
ஆகும் சுரம் ஆகும் அண்டும் பசிகபம்கால்
ஏகும் சுரம் ஏகும் என்"

என்ற வெண்பாவால் அறிக.

தேனைப்பற்றிய சில சுவாரசியமான செய்திகள் உண்டு. தெரிந்து கொள்ளுங்கள்:

"அமெரிக்க அரசாங்கத்தார் மக்களை அதிக தேன் அருந்த வற்புறுத்திப் பிரசாரம் செய்கின்றனராம். தேனினை உட்கொள் பவர்க்கு மேனி அழகு அதிகப்படுமாம். சருமத்தில்சுருக்கங்கள் விழாவாம்.

முல்சம் என்ற பானத்தினை ரோமர்களும், லிப்பிடெஸ்என்ற பானத்தை ருஷ்யர்களும், கிளாரி, பிராகெட் என்ற பானங்களை பிரிட்டிஷாரும் தேனிலிருந்து தயாரித்து உபயோகித்து வந்திருப்பதாய் மேனாட்டு வரலாறுகள் தெரிவிக்கின்றன.

தேனிலிருந்து செய்யப்படும் பீர் அல்லது ஒயினைத் தென் ஆப்பிரிக்கா, கீழ்ஆப்பிரிக்கா முதலிய இடங்களில் உள்ள சுதேசிகள் இன்றும் உபயோகித்து வருகிறார்கள்.

இலங்கையிலுள்ள மலை வெட்டர் என்ற மலைச்சாதியினர் தேனை முக்கிய உணவுப் பொருளாகப் பயன்படுத்துவதும் அன்றி, அதனை அடமானம் வைப்பதற்கான ஜாமீன் பொருளாகவும் உபயோகிக்கின்றனராம். அவ்வளவு சிறப்பு உண்டாம் தேனுக்கு!

டெமாகிரிடிஸ் என்ற கிரேக்க தத்துவ ஞானி தேனினை வெந்நீரில்விட்டு அதிலிருந்து எழும் ஆவியைமட்டும் உட்கொண்டு பலகாலம் எமன் தன்னை நெருங்காமல் இருக்கும்படி தடுத்து வந்தாராம்.

கிழக்கு ஆப்பிரிக்காவிலுள்ள வாசாமியா என்ற குலத்தினர் தங்கள் இனப் பெண்கள் பிரசவத்தின்பின் தீட்டுக்கழியும் வரையில் வெந்நீர் கலந்த தேனையே உணவாகக் கொடுப்பார்களாம்.

தமிழ் நாட்டு வேட்டுவர்கள், தேனும் தினைமாவும் கலந்து புசிப்பதையும், அதையே நைவேத்தியமாக ஆறுமுகக் கடவுளுக்குப் படைப்பதையும், பக்தர்கள் பழனியில் தேன் கலந்த பஞ்சாமிர்தத்தைத் திருமுருகனுக்கு அபிடேகம் செய்து அதை அருந்தி ஆரோக்கியம் பெறுவதையும் தமிழ்நாடு அறிந்ததே ஆகும்.

காந்தியடிகள் தனது இயற்கை சிகிச்சை என்ற நூலில் தேனைப் பற்றிக் குறிப்பிடுகிறார். காபி, டீ அருந்துவதற்குப் பதிலாக வெந்நீரில் எலுமிச்சம்பழரசத்தைக் கலந்து அதில் தேனை விட்டுச் சுடுபானமாக அருந்துவது ஆரோக்கியத்தைத் தரவல்லது என அழகாக விரித்துத் தெரிவித்துள்ளார்.

முற்காலத்தில் எகிப்தியரும், அசிரியரும் அழுகிப்போகாமல் பல நாட்கள் வரை சவங்களைப் பாதுகாக்கத் தேனை உபயோ

சித்து வந்திருக்கின்றனர். இன்னும் அக்காலத்தில் கொழுப்பையும் தேனையும் இறந்தவர்கள் மேல் தடவிச் சவங்களைப் பாதுகாத்து வந்ததாய் ஹோமர் (Homer) என்ற கிரேக்க மகாகவி கூறியுள்ளார். இம் முறைப்படி தான் மகா அலெக்ஸாந்தரது சவமும் பாதுகாக்கப்பட்டதாம். தேனுகிய இவ்வமுது அழுகக் கூடிய சவங்களையும் பாதுகாக்க வல்லது என்ருல் அதை உட்கொள்பவர்கள் ஆரோக்கியம்பெறுவர்என்பதில் ஐயமுண்டோ?

தொகுத்தவர்: 'செந்தில் குமரன்'.

---

## கடிதம் :

தென்னிந்தியா மயிலாடுதுறை
தருமபுர ஆதீனம்
பரமாசாரிய குருமகாசந்நிதானத்துக்கு,
பணிவான அன்பு வணக்கம்!

45, சிவகுருநாதர்வீதி,
வண்ணார்பண்ணை.
யாழ்ப்பாணம்.
20—6—84.

சுவாமிகளுக்கு, "சைவசித்தாந்த முதலாவது அகில உலக மகாநாட்டைத் தாங்கள் திறம்பட நடத்திவெற்றிகண்ட செய்தியைப்பத்திரிகைகள்மூலம்படித்து மட்டிலாமகிழ்ச்சி எய்தினேன். தங்களுடைய பெருமுயற்சி பனைத்துணையாகப் பரிணமித்து நல்ல பயனளிக்கவேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்.

அமெரிக்க ஹவாய் ஆதீனக் குருதேவர் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகள் மகாநாட்டிற் சமர்ப்பித்த "Monism and Pluralism in Saiva Siddhanta" ஏகாந்தமும் அநேகாந்தமும் என்னும் கட்டுரை எமது சிந்தனைக்கு ஓர் உரைகல்லாக அமைந்துள்ளது. அதைப் போற்றுவதும் தூற்றுவதும் இல்லாது நடுவு நிலையிலிருந்து விழிப்புணர்ச்சியுடன் திருவருள் கொண்டு நுண்ணிதாகவும் அவதானமாகவும் சீர்தூக்கி ஆயக்கடமைப்பட்டு உள்ளோம். "அத்துவைதம்" எனச் சைவசித்தாந்திகள் கருதுவது ஏகாந்தத்தையோ அல்லது அநேகாந்தத்தையோ அல்ல என்பதைநாம் முதலில்தெளிந்து கொண்டேவிடயத்தை அணுகி ஆய்தல் வேண்டியுள்ளது. இவை இரண்டும் அல்லாதது தான் சைவசித்தாந்தம் எனப்புலப்படுகிறது. எனவே அவர்கள் தமது கட்டுரைக்குத் தலையங்கமாக இட்ட பெயரே எமது ஆய்வுக்கு அவ்வளவு பொருத்தமாக இல்லை. இப்பொழுது இது விடயமாகத் தொடர்ந்து ஆயவிரும்பவில்லை."

தங்கள் பணிவன்புள்ள

நா. செல்லப்பா.

# திருமகள் விரும்பிச் சேர்வாள்!
# தீமைகள் தூள்தூளாகும்!

பேராசிரியர் இரா. செல்வக்கணபதி எம். ஏ., பி. எட்.

பாலனை, உமையாள் பெற்ற
பண்பனை, அடியார் வாழ
ஆலமர் செல்வன் தந்த
ஐயனை, அமுத ஊற்றை
நீலனை, கரியான் தன்னை
நெஞ்சினில் நினையக் கற்றால்
காலனை வெல்ல லாகும்!
காரியம் வெற்றி கூடும்! (1)

மூலனை, மூலா தார
முன்பனை, நெஞ்சில் தேக்கிச்
சாலவும் நினைவார் நெஞ்சில்
சத்துவம் பரப்பு வானை,
மாலவன் மருகோன் தன்னை
மதித்தொரு மலரை இட்டால்
ஞாலமே ஏவல் கேட்கும்!
நானிலம் உமக்கே ஆகும்! (2)

அருவனை, அருகம் புல்லில்
அன்பனை, தமிழர் வாழ
மருவிய காவி ரிப்பேர்
மாநதி வழங்கி னானை,
ஒருவனை, உயிரா னானை
ஒருமுறை வலமே வந்தால்
திருமகள் விரும்பிச் சேர்வாள்!
தீமைகள் தூள்தூ ளாகும்! (3)

சதுரனை, சதுர்த்தி பூசை
சாலவும் மதிப்பான் தன்னை,
மதுரனை, மன்ம தப்பேர்
மாயனை அடக்கு வானை,
இதுவரை நினையாக் குற்றம்
இருப்பினும் வணங்கக் கற்றால்
புதுப்புது இன்பம் சேரும்
பொல்லாங்கு நிற்கா தேகும்! (4)

இரதனை, இரத்தி னப்பேர்
ஈடிலா ஐயன் தன்னை,
வரதனை, வல்வி னைக்கு
வாளென நிற்பான் தன்னைக்
கரதலம் ஐந்தா னைக்
கண்ணினில் நிறுத்து வீழ்ரல்
வரபலம் கோடி யாகும்!
வானமும் ஏவல் கேட்கும்! (5)

கணபதி, மூத்த பிள்ளை;
கவிதரும் அமுதின் ஊற்று!
இணையிலாத் தெய்வம் என்றே
ஏத்துவீர்! குட்டிக் கொள்வீர்!
பணமது வீடு தேடிப்
பாங்குடன் சேரும்! நல்ல
குணமது நாளும் விஞ்சும்!
குறைவிலா நிறைவே யாகும்! (6)



கட்டுரை எண். 51

# அபிராமி அந்தாதி

டாக்டர் புலவர் திரு. K. சந்தானராமன், M. A., B. Lit.,
D. P. P. A., D. U. N., I. U.
பருத்தியூர்.

**நாயகி, நான்முகி, நாராயணி, கைந்நளினபஞ்ச**
**சாயகி, சாம்பவி, சங்கரி, சாமளை, சாதிநச்சு**
**வாய்அகி மாலினி, வாராகி, சூலினி, மாதங்கியென்று**
**ஆய கியாதி யுடையாள் சரணம் அரண்நமக்கே. 50**

### அ. நாயகி.

(1) அகில உலகங்களுக்கும் தலைவியான அன்னையினை நாயகி என்கிறார்.

(2) பெரியநாயகி, மங்களநாயகி, தையல்நாயகி, ஸ்ரீசக்ர நாயகி, யோகநாயகி, வேதநாயகி என்றெல்லாம் அனைத்துக்கும் தலைவியாகக் கொண்டாடப்படுவள் அன்னை. அவளைப் பொது வாக 'நாயகி' என்கிறார்.

(3) இசைவடிவாய் நின்ற நாயகியான அவள் 'நாயகி' என்ற இராகத்தின் வடிவாயும் இருப்பதால் நாயகி என்கிறார்.

(4) 'கல்யாண சுந்தரநாயகி' எனச் சிங்கை நமச்சிவாயர் உலககம்மையினை வாயார அழைத்து மகிழ்கிறார்.

### ஆ. நான்முகி.

(1) நான்கு முகங்களையுடையவள்.

(2) நான்கு முகங்களையுடைய பிரமனின் ஆற்றலாகவும், பிராம்மி என்ற மாதாவாகவும் அபிராமியே விளங்குவதால் 'நான்முகி' என்கிறார்.

(3) 'சதுர் வக்த்ர மனோகரா' என்பது சகஸ்ரநாமம். சுவாதிஷ்டானத் தாமரையில் நான்கு முகங்களுடன் 'காகினி' என்ற யோகினியாக அம்பிகை எழுந்தருளுகிறாள்.

## இ. நாராயணி.

(1) நாராயணியாகவும் இருப்பவள் அன்னையே.

(2) 'நாரம்' என்றால் தண்ணீர். தண்ணீரில் இருப்பிடம் கொண்ட நாராயணனின் சக்தியாகவும் இருப்பவள், அல்லது நாராயணனோடு தோன்றியசக்தி, விஷ்ணுதுர்க்கை, வைஷ்ணவி என்றெல்லாம் கொண்டாடப்படுபவளை 'நாராயணி' என்றார்.

(3) ஈசனின் நான்கு சக்திகளில் நாராயணனும் ஒருவர் ஆவர். தரங்கக்கடலுள் துயில் கூரும் விழுப்பொருளாகிய அம்பிகையே நாரயணனுக்கு உரியஇடத்தை - சங்கரநாராயண னின் பாதி உடலை நிரப்புவதால் அவள் நாராயணி.

(4) கோப்த்ரி, கோவிந்த ரூபிணி என்ற நாமங்களில் கண்டபடி தானே நாராயணனின் தொழிலாகிய காத்தலைப் புரிகிறாள். பூத்தவண்ணம் காத்தல் புரியும் நாராயணனின் தொழிலைப் புரிபவளை 'நாராயணி' என்கிறோம்.

(5) 'சுபார்ஸ்வம்' என்ற தலத்தில் அம்பிகை 'நாராயணி' என்னும் நாமத்துடனேயே எழுந்தருளியிருக்கிறாள்.

## ஈ. கைந்நளினபஞ்ச சாயகி

(1) தாமரைக் கரத்தில் ஐந்து அம்புகளையுடையவள்.

(2) நளினம் என்றால் தாமரை என்று பொருள். சாயகம் என்றால் அம்பு. அம்புகளையுடையவள் சாயகி. தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் ஆகிய ஐந்து மலர்க்கணைகளை அம்பு களாகக் கொண்டிருப்பதால் 'பஞ்ச சாயகி' என்றார். பஞ்ச பாணங்கள் பற்றிய விளக்கத்தினை முன்னரே கண்டோம்.

(3) ஏகநாயகியானவள், பிரம்மசக்தியாகவும் விஷ்ணுசக்தி யாகவும் இருக்கிறாள். அவளே திரிபுரசுந்தரியாகவும் பஞ்ச பாணம் தாங்கி நிற்கிறாள் என்பதனை உணர்த்த 'கைந்நளின பஞ்ச சாயகி' என்கிறார்.

## உ. சாம்பவி.

(1) சாம்பவி என்ற பெயருடையவளும் அவளே.

(2) சம்பு என்ற சிவனின் மனைவி சாம்பவியானாள். உயிர் களுக்கு நன்மையினைச் செய்பவன் சம்பு. அவனுடன் இணைந்து தானும் நன்மையே புரிபவள் ஆதலின் அவள் 'சாம்பவி'.

(3) நவராத்திரி போன்ற காலங்களில் பெண்குழந்தை களையும் அம்பிகையாகக் கருதி வழிபடுதல் வழக்கம். முதல் நாள் ஒரு வயதுப் பெண்குழந்தை, இரண்டாம் நாள் இரண்டு

வயதுக் குழந்தை என்ற முறையில் ஒன்பது நாட்களும் வழிபடு தல் உண்டு. அம்முறையில் எட்டாவது நாள் வழிபடப்படும் எட்டுவயதுப் பெண்குழந்தையினை 'சாம்பவி' என்று குறிப் பிடுவர். அவ்வாறு 'சாம்பவி' யாக வருபவளும் அம்பிகையே.

(4) யோகநெறியில் சாம்பவிமுத்திரை என்ற ஒரு முத்திரை உண்டு. அம்முத்திரையால் குறிப்பிடப்படும் அம்பிகை 'சாம்பவி' ஆவாள்.

(5) குரு தனது சீடனின் சிரசில் காமேஸ்வர காமேஸ்வரி யின், வெண்மை – சிகப்பு நிறமுள்ள இணைந்த கோலத் திருவடி களைப் பதிப்பதாகப் பாவனை செய்து அளிக்கும் தீட்சைக்கு சாம்பவி தீட்சை எனப்பெயர். சாம்பவி தீட்சைமூலம் அறிமுகப் படுத்தப்படுவதால் அவள் 'சாம்பவி' ஆகிருள்.

### ஊ. சங்கரி

(1) சங்கரி என்னும் திருநாமம் உடையவளும் அவளே. சகஸ்ரநாமத்தில் 'சங்கரி' என்று குறிப்பிடப்படும்.

(2) உயிர்களுக்கு இதமானவற்றையே புரிவதால் இறைவ னுக்குச் 'சங்கரன்' என்றுபெயர். அவனதுசக்தியாகிய அம்பிகை யும் அவ்வாறே உயிர்களுக்கு இனியவே புரிகிருள். ஆதலின் அவளும் 'சங்கரி' என்று அழைக்கப்படுகிருள். மங்களத்தைச் செய்பவள் என்ற பொருளும் உண்டு.

### எ. சாமளை

(1) சியாமளா தேவியாகவும் இருப்பவளை சாமளை என்ருர்.

(2) சியாமள நிறமென்னும் பசிய கருமை நிறம் உடைய சியாமளா தேவி என்னும் நுண்கலைகளுக்கு அதிதேவதையான இவளைப்பற்றிப் "பசும் பெண்கொடி" என்ற இடத்தில் விரி வாகக் கண்டோம்.

### ஏ. சாதி நச்சுவாயகி மாலினி

(1) நல்ல ஜாதியினைச் சேர்ந்த நச்சு வாயுடைய அரவ மாலையினைப் பூண்டவள்.

(2) நல்ல மணமுள்ள மல்லிகையினை 'ஜாதிமல்லி' என்பது போல் உயர்ந்தவகையினைச் சேர்ந்த பாம்பினை 'சாதிநச்சுவாய் அகி' என்ருர். அகி – பாம்பு. நச்சே முதிர்ந்து நாகரத்தினமும் ஆகும் என்பர். அச்சிறப்புக்கருதி சாதிநச்சுவாய் அகி மாலினி என்ருர்.

(3) தான் குண்டலினி சக்தியாகவும் இருப்பதனை உணர்த்த அம்பிகை அரவ மாலையினைப் பூண்டிருக்கிருள்.

## ஐ. வாராகி

(1) வாராகி என்னும் பன்றி முகமுடைய சக்தியாய்இருப்பவளும் அவளே. வராகம் – பன்றி.

(2) பண்டாசுரனுடன் அன்னை போர் புரியப் புறப்பட்டபொழுது அவளது பல கூறுகளும் வெளிப்பட்டன. அவற்றுள் ஒன்று வாராகி யாகியது. காட்டுப்பன்றிகளால் இழுத்துச் செல்லப்பட்ட தேரின் மீது ஏறிச்சென்று வாராகி பண்டனுடன் போரிட்டாள். காட்டுப் பன்றிகள் இழுத்த தேரில் சென்றதால் அவள் வாராகி என்று அழைக்கப்பட்டாள்.

(3) வராகநந்தநாதர் என்ற பக்தருக்குப் பன்றி வடிவில் காட்சி தந்ததால் அவள் 'வாராகி' என்று அழைக்கப்பட்டாள்.

(4) 'பூவராகன்' என்ற திருமால் தனது தந்திப்பல்லினால் நீரில் மூழ்கிய பூமியினை மீட்டுக் கரையேற்றினார். அதுபோல் சம்சாரசாகரமென்னும் வெள்ளத்தில் மூழ்கிய உயிர்களைக் கரை யேற்றுவதால் அன்னையும் 'வாராகி' என அழைக்கப்படுகிறாள்.

(5) பன்றி அல்லது வராகம் அசுத்தங்களை உண்டு தூய்மைப்படுத்தும் பணியினைச்செய்கிறது. அங்ஙனம் உயிர்களுக்கு 'மலபரிபாகம்' செய்விப்பவள் ஆதலின் 'வாராகி' ஆனாள் – "தங்கள் மலங்கழுவுவார் வந்து சார்தலினால்" என்ற திருவெம்பாவைக் கருத்து ஒப்புநோக்கத் தக்கது.

(6) பண்டாசுரனின் தம்பி விசுக்ரனை அழித்தவள் வாராகி என சகஸ்ரநாமம் கூறுகிறது.

(7) வராகிமாலை என்ற தமிழ்ச் செய்யுள் நூல் இவளைப் பற்றியது என்பதும் குறிப்பிடத்தக்கது.

## ஒ. சூலினி

(1) முத்தலைச் சூலம் என்னும் திரிசூலப் படையினைத் தரித்தவள்.

(2) இறைவனைப் போலவே அன்னையும் திரிசூலப் படையினைத் தரிக்கிறாள். தன் அருளால் அடியவரின் மும்மலங்களை அழித்தலையும், முத்தொழில் புரிதலையும் சூலப்படை உணர்த்துகிறது.

(3) திருக்கோயில் உற்சவங்களின் பொழுது வீதி உலாவுக்கு முன் சூலமே எழுந்தருளுவதும் உண்டு. ரட்சை செய்தல் மற்றும் பிராண சக்தியினை ஆவாஹனம் செய்வதே இதன் நோக்கமாகும். அதாவது சூலினியாகிய அம்பிகையே எடுத்த காரியம் நிறைவேற ஆற்றலை அருளவேண்டுமென்று எண்ணுவதேயாகும்.

## ஓ. மாதங்கி

(1) யாழ்ப்பாணர்களாகிய இசைவாணர்களின் குலத் துதித்த மாதங்கி தேவியும் அவளே,

(2) மதங்க முனிவருக்குப் பெண்ணாகத் தோன்றிய பொழுது அம்பிகைக்கு 'மாதங்கி' என்ற பெயர் ஏற்பட்டது. அத்துடன் யாழ்மீட்டும் பாணர் குலத்தோரையும் 'மதங்கர்' என்று அழைப்பர். அக்குலத்தில் தோன்றியதால் அம்பிகை மாதங்கி எனப்பட்டாள். மாதங்கி சியாமளாதேவியின் ஓர் அம்சமே ஆவாள். 'மதங்கர் குலப் பெண்களில் தோன்றிய எம் பெருமாட்டிதன் பேரழகே' என்பார் பின்னும்.

## ஔ. ஆயகியாதியுடையாள் சரணம் அரண் நமக்கே!

(1) இத்தகைய புகழ் உடைய அன்னையின் திருவடிகள் நம்போன்ற அடியாருக்கு அரண் அல்லது பாதுகாவல் ஆகும்.

(3) மேற்கூறிய பல வடிவங்களின் வரலாற்றிலும் பெரும் புகழ் அடங்கியிருப்பதால் " ஆயகியாதி (புகழ்) உடையாள் " என்றார்.

(3) 'உதாரகீர்த்தி' - பெரும் புகழ் உள்ளவள் எனச் சகஸ்ர நாமம் கூறுகிறது.

(4) அவளது திருவடிகளே நமக்குச்சிறந்த உண்மையான பாதுகாப்பாக அமைகிறது. சக்திகவசம் போன்ற நூல்களில் அவள் ஒவ்வொரு நிலையிலும் அரணாக இருப்பது குறிப்பிடப் படுகிறது.

## ∴ ஐம்பதாவது பாடலின் சிறப்பு.

(1) அபிராமி அந்தாதியில் ஐம்பதாவது பாடலாகிய இப் பாடலில் அன்னையின் திருநாமங்கள் அருச்சனைபோல் அழகாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மீண்டும் எழுபத்தேழாவது பாடலில் திருநாமங்களைக்காணலாம். சுருக்கமாகவழிபாடியற்று வோர் இப்பாடலில் குறிப்பிடப்படும் ஏகாதசநாமங்கள் ( பதினொரு திருப்பெயர்களையும் ) அருச்சித்து முழுப்பயனும் அடையலாம்.

(2) நாராயணி, சாம்பவி, சங்கரி போன்ற பெயர்கள் இன்னொரு பெயரிலிருந்து தோன்றிய பெயர்கள் ஆகும். அவற்றினை வடநூலார் ' தத்திதாந்த நாமம் ' என்பர்.

அம்பிகையின் பூரணமான பாதுகாப்பு கிடைப்பதே இப் பாடலின் பாராயண பலன் ஆகும். (தொடரும்)

# சைவசித்தாந்தத்தின் முக்கியத்துவம்

*[இது, திரு. ந. ரா. முருகவேள் அவர்கள் எழுதிய "சைவசித்தாந்தம்" என்ற நூலைப்பற்றிய 10—7—1984 இல் "இந்து"வில் வெளியான மதிப்புரையின்மொழிபெயர்ப்பாகும். தமிழாக்கம்: தவத்திரு சுவாமி வீரபாகு அவர்கள்.]*

**சைவசித்தாந்தம்: திரு. ந. ரா. முருகவேள் அவர்கள் எழுதியது. சென்னை, குன்றத்தூர் சேக்கிழார் பதிப்பகம் பதிப்பித்தது. விலை ரூ. 30.**

இப்பயன்மிக்கநூல் திரு. ந. ரா. முருகவேள் அவர்களால் பல்வேறு சமயங்களில் எழுதப்பட்ட இருபத்துமூன்று கட்டுரைகளின் தொகுப்பாகும். இந்நூல் திரு. டி. எம். நாகலிங்கம் அவர்களால் தொகுக்கப்பட்டுத் தருமபுர ஆதீனத்தில் நிகழ்ந்த அனைத்துலக சைவ சித்தாந்த முதல் மாநாட்டின்போது வெளியிடப்பெற்றது.

சைவசித்தாந்த தத்துவம் தமிழரின் சமய உணர்வின் பேரியல்பின் இயற்கையான விளைவாகும். ஆகையால் இந்நூலைக் கற்றுணர்வார், தமிழ்ப்பண்பாட்டின் பெருமையை ஆழ்ந்து உணர்வதாகிய பயனைத் தக்க முறையில் பெற்று மகிழ்வர் என்பதில் ஐயமில்லை.

சமயம் என்பது மனித வாழ்வின் மாபெரும்பயனாகி அது சூழ்நிலைக்கு ஏற்ப உண்மைகளை உணரும் ஒரு பார்வையைப் பெற்றுத் தன்னைத்தானே வெளிப்படுத்திக்கொள்கின்றது. அதன் மூலமாகத் தோற்றுவிக்கப்படுவன :- (1) அதனையே சார்ந்திருத்தலாகிய ஒரு மனோநிலை, (2) அதனோடு தானே உறவுகள் நிறுவிக்கொண்டு அதன்மூலமாகப் பயன்பெற முயற்சிகள் மேற்கொள்வது, (3) அவ்வித முயற்சிகளாலே சமுதாய அனுபவம், பண்பாடு, அமைப்புமுறை, வழக்கங்கள் ஆகிய பயன்களைப் பெறுவது. இந்தியாவிலுள்ள ஆத்திக சமயங்களில் சைவம் ஒரு பெரும்பிரிவைச் சார்ந்தது. சிவன் என்பது பல அம்சங்களைத் தன்னுட்கொண்ட ஓர் உருவமைப்பாகும். அது பல நூற்றாண்டுக்காலமாகக் கிரகிக்கப்பட்ட

தற்பயன்களைத் தன்னுளேகொண்டு அமைந்திருக்கிறது. பரம் பொருளாகிய பரமன் யோகமூர்த்தியாகத் திகழ்வதாகத் தத்துவ ஞானம் இயம்புகிறது. ஆகையால் அவனது ஆக்க கிருத்தியங்கள் அத்தனையும் அவனது தேவியின் மூலமாக நிகழ்வதாக உருவகிக்கப்படுகிறது. அஃது ஆற்றலின் (Enengy) பெண் வடிவ வெளிப்பாடாக அல்லது சக்திதேவியாக உருவகம் செய்யப்பட்டு உள்ளது. சிவபிரானது நீண்ட நெடிய வரலாறு வேதத்தில் விளம்பப்பட்டுள்ள பழைய வாயு தெய்வமான ருத்திரனிலிருந்து நவீனமான இக்காலம்வரை விரிந்து பரந்து கிடக்கிறது. சைவசமயத்தின் பல்வகையான இயல்பால் அஃது எல்லாநிலைப்பட்ட மக்களையும் ஈர்க்கும் சக்தி வாய்ந்ததாக இலங்குகிறது. ஆகையால்தான் ஈண்டுக் கடுமையானமாற்றத்தாலும், காணப்படும் பிரபஞ்சத்தின் பரிணமத்தாலும் பாதிக்கப்படாமல் நிலைபேறுகொண்ட நின்மலமூர்த்தியாகச் சிவபரம் பொருளை – மகாதேவனைத் – தத்துவஞானம் காண இயல்கிறது. பரிபூரண இலட்சியவாதத்தைப் (Absolute Idealism) பின் பற்றும் தத்துவஞானியும், தவக்கோலம்பூண்ட துறவியும், மௌனயோகியும், பக்திக்கோட்பாட்டைப் பின்பற்றும் பக்தர்களும் – அனைவரும் இச்சமயத்தைத் தத்தம் துறைகளில் மேற்கொண்டிருக்கின்றனர்.

இந்நூலின் ஆசிரியர் கூறுகிறார்:- "சைவசமயம் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்டதொரு சமயம் ஆகும். இது நினைவுக்கு எட்டாத காலம் தொட்டு நின்று நிலவிவருவதாகும்" என்கிறார் (பக்கம் 323.) தமது கொள்கையை நிலைநாட்ட இந்நூலாசிரியர், "சைவம் இவ்வுலகில் மிகமிகப் பழமையான வாழும் சமயம்" என்று கூறும் பல மேனாட்டறிஞர்களின் வாக்கியங்களை மேற்கோளாகத் தந்திருக்கிறார். இலிங்க வழிபாட்டுப் பழக்கம் மிகவும் பொதுமை வாய்ந்ததால், அஃது இவ்வுலகில் மக்கள் வாழும் பெரும் பகுதியில் மல்கித் தானே பரவும் தன்மையைத் தாங்கி நிற்கிறது.

12 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இராமானுசர், சைவத்தில் இருபிரிவினர்கள் இருந்ததாகவும், அவர்கள் முறையே காபாலிகர்கள் என்றும் காலமுகர்கள் என்றும் குறிக்கப்படுவர் என்றும், அவர்கள் சிவவழிபாடுபற்றி விசித்திரமான கோட்பாடுகளைக் கொண்டிருந்தனர். அவர்கள் வேதங்களை ஏற்காத எதிர்ப்பாளர் ஆவார்கள். என்றும் கூறுவார்.

ஸ்ரீ மத்துவர் (கி. பி. 1200) தமிழகத்தில் நிலவிய சைவக் கோட்பாடு பற்றி விவரித்திருக்கிறார். "சைவம் அடிப்படையிலே ஒரு பன்மைவாதக் கோட்பாட்டைக் கொண்டதாகும்,

ஒருமைவாத தத்துவத்தைக் கொண்ட காஷ்மீர சைவசமயத்திற்கும் இதற்கும் அடிப்படையிலே வேறுபாடு உண்டு. காஷ்மீர் சைவமும் தமிழக சைவசமயமும் நகுலிசபாசுபதர்களின் தீவிர வாதப் போக்கிலிருந்து தோன்றின. இரண்டும் உயர்ந்த யோக ஞானத்தைப் போதிக்கின்றன. அதன்படி ஆன்மா, ஒரு சர்வ வியாபகமான தன்னுணர்வற்ற சர்வ வியாபக பரம்பொருளால் இணைப்புக் கொள்ளப்படுகிறது. அது பெரிதும் சூன்ய நிலையே ஆகும். அதே நேரத்தில் அதன்மூலம் தனக்கு விளங்கிக் காட்டியதொரு தெய்வத்தின்பால் மெய்யுணர்வு கொள்ளச் செய்கிறது", "எனவே சைவசமயம் ஒரு தெளிவானது; ஆரவார மற்ற இருமைவாதம் கொண்டது அல்லது பன்மைவாதம் கொண்டது ஆகும் என எவரும் சொல்லக்கூடும்".

இந்நூலாசிரியர் கூறுகிறார்: "தென்னாட்டுச் சைவசமயிகள் சிவனைப் பற்றிய அறிவைச் சிவஞானபோதத்தின் பன்னிரு சூத்திரங்களை அடிப்படையாகக் கொண்டுள்ளனர். இவை 13-ம் நூற்றாண்டில் வாழ்ந்த மெய்கண்ட தேவரால் அருளப்பட்டன வாகும். மேலும் நூலாசிரியர் டாக்டர் ஜி. யு. போப்பின் வாசகத்தை மேற்கோளாக வழங்கினார். "சைவசித்தாந்த தத்துவம் திராவிட மக்களின் அறிவிலிருந்து வெளிப்பட்ட மிகமிகத் தேர்ந்து எடுக்கப்பட்ட விளைவு ஆகும். அது மிகவும் விரிவானதாகும். செல்வாக்கு உடையதாகும். ஐயமின்றி அஃது இந்தியாவின் எல்லாச் சமயங்களினும் உண்மையில் மிகமிக மதிப்பு உடையதாகும். அது தனிச்சிறப்பான முறையில் தென்இந்திய மரபைச் சார்ந்தது-தமிழ்ச்சமயம் எனக் கூறத்தகும்". ஆசிரியர் ஒரு வெண்பாவினை மேற்கோளாகத் தருகிறார். 'வேதம் பசு; அதன்பால் ஆகமம்; நால்வர் நயந்தளித்த (தேவார – திருவாசகமாகிய) தமிழ் அதனிலிருந்து கடைந்தெடுத்த நறுநெய்; திருவெண்ணை நல்லூரைச் சேர்ந்த மெய்கண்டதேவரின் சிவஞான போதத்தின் அருமைப்பாடு அத்தகைய நெய்யின் உறுசுவையாகும்".

இவ்விடத்தில் ஆசிரியர் வேதம் எனக்குறிக்கப்படுவது 'திருக்குறள்' ஆகும் என்றும் ஆகமம் என்பது "திருமந்திரம்" எனவும் கூறுகிறார். (பக்கம் 6) இஃது ஒரு புதுமையான கருத்தாகும். இதனைக் கட்டுரைகள் அத்தனையிலும் ஆசிரியர் வற்புறுத்துவதைக் காணலாம்.

கி. பி. 9-ம் நூற்றாண்டைச் சேர்ந்த சைவமுனிவர் திருமூலர் தமது திருமந்திரத்தில் தெரிவிக்கிறார்: "வேதங்களும் ஆகமங்களும் இரண்டுமே உண்மையானவை; இரண்டும் இறைவனின்

வாசகமே. முதலாவது ஒரு பொதுவான ஆய்வு; பின்னது சிறப்பான ஒன்று. தேர்ந்து காணுங்கால், வேதாந்தத்திற்கும் சித்தாந்தத்திற்கும் பேதம் தென்படுங்கால் அவைகளிடையே ஒரு பேதமும் காணப்படாது". எனினும் தமிழ்ச் சைவர்கள் தமது சமயத்தை இவ்வாறு பெருமையோடு கூறுகின்றனர்: "உயர் தரமுள்ள ஞானத்தை அடித்தலமாக உடையது. ஆன்மீக நிலையில் தெய்வாம்சம் பொருந்திய 28 தெய்விக ஆகமங்களால் அமைக்கப்பட்டது" என்பர்.

தமிழ் அறிஞர்கள் தமிழ் வடிவிலே "சித்தாந்தம்" என்றும் வடமொழி வடிவிலே "சித்தாந்தா" என்றும் செப்புகின்றனர். அச்சொல்லின் பொருள் "உண்மையான முடிவு" "உறுதியான முடிவு" "சரியான முடிவு" "உண்மை நோக்கம்" "இறுதியான குறிக்கோள்" எனப் பேசப்படும். வானசாத்திர நூல்கள் 18 சித்தாந்தங்களைக் கூறும். பிரபலமான தமிழ்க்கோட்பாடு தெரிவிக்கிறது; "சித்தாந்தம்" என்ருல், "நிறுவப்பட்டமுடிவு", "குறிக்கப்படும் அல்லது ஸ்தாபிக்கப்பட்ட முடிவு" என்பதாகும். அஃது ஆறு முடிவுகளில் (அந்தங்களில்) ஒன்ருகும்; அதாவது வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம் (நாதங்களின் முடிவு), போதாந்தம் (ஞானத்தின் முடிவு), யோகாந்தம், கலாந்தம் (தத்துவங்களின் முடிவு). துறவி தாயுமானவர் "முத்தாந்தம்" என்ற ஏழாவது ஒன்றையும் கூட்டிக்கொள்ளுகின்ருர்.

சித்தாந்தம் கற்பிப்பதாவது :– ஆன்மா நிரந்தரமானது, உருவம் அற்றது; சர்வ வியாபகமானது (விபு); சர்வ வியாபகமான இயல்பு (வியாபகம்) அதனைத் தற்காலிகமாக தான் வாழும் ஒன்றிலிருந்து தெய்விகத்திேைடு ஒன்ற வழி அமைக்கிறது. ஆன்மா தன்னைப்பற்றி ஏதும் தெரிந்துகொள்ளமுடியாது. அஃது ஆண்டவனைப்போல் தூய அறிவுவடிவான ஒன்று (சித்) அன்று; ஏனெனில் ஆன்மாவினைச் சூழ்ந்து நிற்கும் கன்மம், மாயை, ஆணவம் ஆகியமலங்கள் அறிவற்றவையாகும். அந்த அறிவை அஃது இறைவனின் பரங்கருணையால் அன்றிப் பகுத்தறிந்து கொள்ள முடியாது. ஆன்மா அறிவுபெறுவதும், அறிவு பெருது இருப்பதும் இறைவன் திருவருளை வழங்குவதிலும் வழங்காதிருப்பதிலும் பொருத்திருக்கிறது – 'திருவருட்பயன்'. சிவபிரானைப்பற்றி அருள்நந்தி சிவாசாரியார் நவில்கின்ருர்:

"அவன் சிந்தனைக்கு அப்பாற்பட்டவன் என நீ சிந்தித்தால் அதுவும் கூட எவ்வித பயனையும் தராது; அதுவும் ஒரு வெறு கற்பிதம் ஆகும்; அவன் நீயே எனப்பாவித்தால் அதுவும்

வெறும் கற்பிதமே. அவனை அறிந்துகொள்ளுவதற்குரிய ஒரே வழி அவனது அருளாலே - கருணையாலே தான்'' (பக்கம் 38). எங்கே நாட்டம் எல்லாம் முடிவுறுகிறதோ அங்கே ஆட்டம் பூண்ட அரனது உறைவிடம் உள்ளது.

இந்நூல், நூல்நிலையங்களிலும், கல்லூரி படிப்பிடங்களிலும் வைக்கப்பெறவேண்டிய ஒன்று என நான் அழுத்தமாகப் பரிந்துரை செய்கிறேன். ஆய்வுப் புலவர்களுக்கு இஃது ஓர் அற்புதமான பயன்தரும் நூலாகும் என நான் உறுதியாகக் கூறுகிறேன்.

பண்டிட் வி. நடேசன்

நன்றி: இந்து

## திருநீறு பூசிய எம். ஜி. ஆர்.

கமுதி ஜூலை 27— முதல்வர் எம். ஜி. ஆர். இன்று தான் திருநீறு பூசியதுடன் தன்னுடன்வந்த அமைச்சர்கள் நெற்றியிலும் திருநீறுபூசிப் பரபரப்பை ஏற்படுத்தினர்.

முதல்வர் எம். ஜி. ஆர். இன்று காலை மதுரையிலிருந்து ஹெலிகாப்டர்மூலம் கமுதிக்குவந்தார். பின்னர் கார்மூலம் பசும்பொன் கிராமத்திலுள்ள முத்துராமலிங்கத் தேவர் சமாதிக்குச் சென்றார்.

அவருடன் அமைச்சர்கள் காளிமுத்து, திருநாவுக்கரசு மற்றும் முத்துசாமி ஆகியோரும் வந்திருந்தனர்.

தேவர் சமாதியில் முதல்வர் எம். ஜி. ஆர். மலர் வளையம்வைத்து அஞ்சலிசெலுத்தினர். மேலும் சூடத்தைக் கொளுத்திச் சமாதியில் தீப ஆராதனை செய்தார். பின்னர் சூடத்தட்டில்இருந்த திருநீற்றை எடுத்துத்தனதுநெற்றியில் பூசிக்கொண்டார்.

பின்னர் முதல்வர் எம். ஜி. ஆர். தன்னுடன்வந்த எம். எல். ஏ. க்கள் சத்தியமூர்த்தி மற்றும் தனுஷ்கோடி தேவருக்குத் தன்கையால் திருநீற்றை எடுத்து அவர்களுடைய நெற்றியிலும் பூசிவிட்டார். இதனைக்கண்ட மக்கள் அனைவரும் பரவசம் அடைந்தனர்.

— நன்றி. தினமலர் 18—7—84

# சண்டேசர்

**வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன்** எம். ஏ.

[தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் 1—7—1984 ஆங்கிலமாத முதல் ஞாயிறன்று வழங்கிய அருளுபதேசத்தை ஒட்டி எழுதப்பெற்ற கட்டுரை.]

திருநெறிய தெய்வத்தமிழ் மன்றத்தைக் கடந்து திருமடத்து முகப்புக்குள் நுழைகிறேன். கடிகாரம் 9-50 காட்டிற்று. இன்னும் பத்துநிமிடத்தில் அருளாசி தொடங்கிவிடும்!

பிரதான வாயில் வழியாக உள்ளே நுழைய முயன்றேன். ஒரு இனிய சிற்பம் என்னைச்சற்று நிறுத்தியது! நுழைவோருக்கு வலப்புறத்தின் வாயிலை அடுத்த முதல்தூணின் இடையில் அமைந்த சிற்பம் அது!

ஒரு யானை கன்று ஈனும் காட்சி! கன்று ஈனும் பிடியின் வயிற்றைத் துதிக்கையால் சுற்றியவாறு அழுத்தமாக – ஆனால் இதமாகப் பிடிக்கிறது ஒரு யானை! ஈனுவதற்கு இடையூறு நேராதவாறு யானையின் வாலைத்தன் துதிக்கையால் லாவகமாகத் தூக்கிப் பிடித்துக் கொள்கிறது மற்றோர் யானை! யானையின் கருவாய் வழியாக அழகிய கன்று வெளிப்படுகிறது; எத்தனை இயற்கையான காட்சி அது!

இனிய சிற்பத்தை ரசித்தவாறே உள்ளே சென்று சொக்க நாதரை வழிபட்டேன். பண்டாரக்கட்டினுள் அன்பர்களும் ஆசிரியர்களும் பாடசாலை மாணவர்களும் ஆர்வத்தோடு நுழையும்காட்சி கண்ணில் பட்டது. எல்லோரும் குருமணிகளைத் தரிசித்துத் திருநீறு பெற்றோம்; பிரார்த்தனை ...... அடுத்து அருளுபதேசம்.

குருநாதர் அந்த மாதத்தின் சிறப்பினை முதலில் கூறி உபதேசம் தொடங்குகின்றார்கள்.

முகலாய அரசர்கள் காலத்திலிருந்து விவசாயத்திற்காக நடைமுறையில் இருந்துவரும் பசலிக்கணக்கு இன்று தொடங்கு கிறது. 1394 ஆம் பசலித்தொடக்கம். ஏப்ரல் மாதம் தொடங்கும் அரசாங்க வரவுசெலவுக் கணக்கு ஆண்டினைப்போன்றது இது

ஆனித் திருமஞ்சனம் இம்மாதச் சிறப்புக்குக் காரணமாவ தோடு ஆனி மகத்தில் இறைவன் திருவடி கலந்த மாணிக்க வாசகர் திருநாளும் வருகிறது.

நாயனுர் புராணம் பற்றிக் குறிப்புத் தருகிருர்கள்: சண்டீசர் சண்டேசர், சண்டீசுவரர் என்ற பல திருப்பெயர்களால் வழங் கப்பெறும் நாயனுர் புராணம் 60 திருப்பாடல்களால் அழகுற அமைந்துள்ளமையையும் இறை வழிபாட்டு முறைகளையும் ஆசார விதிகளையும் அறிவிப்பனவாய் உள்ளமையையும் அருளினர்கள்.

குருமணிகள் உபதேசிக்கிருர்கள்: "தன்னலம் சிறிதும் இல்லாமல் உயிர்களின் நன்மைக்காக அருளுபவர் கடவுள் ஒருவரே". உலகில் மக்கள் பொதுநலத்திற்காக உழைப்பது போலத் தோன்றினலும் அந்தப்பொதுநலத்துக்குள்ளே தம்மை அறியாமலே தன் வளர்ச்சி நாட்டம் கலந்து விளங்குகின்றது.

எடுத்துக்காட்டுகள் தருகின்றுர்கள்: பாடம் கற்பிக்கும் ஆசிரியர் கற்பிக்கும்போதே தன் அறிவை மிகுத்துக்கொள்கிருர். இசைகற்பிக்கும் ஆசிரியர் கற்பிக்கும் அந்தச் செயலாலேயே இசையை வளர்த்துக் கொள்ளச் சாதகம் செய்கிருர். விவசாயம் முதலியவற்ருலும் பொதுநலப் போக்கில் தன்னல வளர்ச்சி நிறைவு அடைகிறது. குழந்தையைக் கொஞ்சும் தாயும் குழந்தைக்கு ஆறுதல் தரும் அதே சமயம் தானும் மகிழ்ச்சி அடைகிருள்!

எத்தனை உதாரணங்கள்! முடிவாக அருளினர்கள் "மனிதன் வளர வேண்டும்; எப்படி? மனித வளர்ச்சி உலக வளர்ச்சி யோடு ஒட்டி அமையவேண்டும்" என்று.

அடுத்துச் சண்டீசர் பற்றிய கருத்துக் குவியல்களைச் சிந்தனைப் பசிக்கு விருந்தாக்கினர்கள்.

"சுந்தரர், திருஞானசம்பந்தருக்கும் சண்டீசருக்கும் திருநாவுக்கரசருக்கும் ஒத்த பெருமையை அளித்துள்ளார்" என்பதைத் திருத்தொண்டத்தொகையில் அமைந்திருக்கும் தொடர்களை எடுத்துக்காட்டி 1½ அடியளவுக்குக் காட்டி இந்த நாயன்மார்பற்றிக் கூறியிருத்தலைக் குறிப்பிட்டார்கள்.

சேய்ஞலூர் நாயனுர் அவதரித்த தலம்: சென்னை தம்ப கோணம் சாலையில் திருப்பனந்தாள், திருஆப்பாடியை ஒட்டி விளங்குவது இத்தலம். முருகப்பெருமான் சூரனை சம்ஹரிப்ப தற்காகத் திருச்செந்தூர் செல்லும் வழியில் தங்கிய இடம். முருகனல் 'இது நல்ல ஊர்' எனப் புகழப்பட்டது ஆகவே,

சேய்நல்லூர்-சேய்நல்லூர் சேங்கனூர் என்ருயிற்று. 'ந' 'ஞ' 'ங' போலியாதல் உண்டு. ஆதலால் சேய்ஞலூர் என வழங்கப் படுகிறது எனக் காரண இயைபோடு இலக்கணச் செறிவோடு அருளினர்கள்.

மேலும் அத்தலத்துக்கு உரிய சிறப்பினையும் நமக்கு உணர்த்தினர்கள்.

"தொண்டை நாட்டில் காஞ்சிபுரத்தில் அம்மையார் (தாய்) சிவாகம முறைப்படி இறைவனைப் பூசித்தமைபற்றிச் சென்ற மாதம் சிந்தித்தோம். இம்மாதம், சோழநாட்டில் "சேய்ஞலூர் என்ற தலத்தில் மகன் (முருகன்) பெருமானை முறைப்படி பூசித் தமைபற்றிச் சிந்திக்கின்ரேம்". குருமணிகளின் இப்புதிய நோக்கு நம் சிந்தனையைத் தூண்டுவதாக அமைகிறது.

இப்படிப் பல பெருமைகளுக்கு உரிய தலத்தில் அந்தணர் குலத்தில், காசிப கோத்திரத்தில் எச்சதத்தருக்கும் பவித்திரை என்ற அம்மையாருக்கும் திருமகனுராக அவதரித்தவர். பெற்ரேர் விசாரசர்மர் எனப் பெயரிட்டு வழங்கினர்.

குருமணிகள், நாயனரின் தந்தையார் பெயராகிய எச்சதத்தர் என்றசொல்லுக்குவிளக்கம்வழங்கினர்கள். எச்சம்–யச்சம்-யக்ஜம் (அதாவது வேள்வி) என்னும் பொருள்தன்மையை உடையது என உணர்த்தினர்கள். விசாரசருமரைப் பெற்ற மையால் சிறப்பும் பின்னர் சிவபூசைக்கு இடையூறு விளைத்த மையால் சிறப்பின்மையும் உடையவர் எச்சதத்தன். இதனைச் சேக்கிழார் அருளிய

" அருமை மணியும் அளித்து அதுவே
நஞ்சும் அளிக்கும் அரவுபோல் "

என்னும் தொடர்கொண்டு புலப்படுத்தினர்கள். மேலும் காசிப கோத்திரம் பற்றிய விளக்கத்தில் காசிபர் 3000 ஆண்டுகட்கு முன் வாழ்ந்தவர் என அருளி அவர் கோத்திரத்தொன்மை, சிறப்பு முதலியவற்றையும் அருளினர்கள்.

குருமணிகள் "பண்ணின் பயனும் நல்லுரையும்" என்னும் பெரியபுராணப் பாடலைச் சேய்ஞலூர்ச் சிறப்புத்தோன்ற விளக்கம் அளித்தருளினர்கள்; அதனை அடுத்துச் "செம்மை வெண்ணீற்று ஒருமையினர்" எனத்தொடங்கும் எண்ணலங் காரம் பொருந்திய பாடலில் அமைந்த "மும்மைத்தழல் ஓம்பிய நெறியார்" என்ற தொடரைத் திருமுறைகள், வேதாகமங்களின் நெறியோடு அருளிய விளக்கம் அறிவுக்கு விருந்தாய் அமைந்தது !

ஆகவனியம், காருகபத்தியம், தட்சிணக்கியம் என்பன முத்தீ. தீ, அக்கினிதேவன் வடிவம். அக்னிதேவன் 2 தலைகள் 7கைகள் 3கால்கள் கொண்டவன்.

இதனைத் திருவிசைப்பாவில்,

"இருமுகம்; கழல்மூன்று; ஏழுகைத் தலம்ஏழ்
இருக்கையில் இருந்த ஈசனுக்கே"

எனும் தொடர்கள் தீயாகி நிற்கும் பெருமான் மேலேற்றிக் கூறுவதால் உணரலாம். இரண்டு முகங்கள் தேவர்க்கும் பிதுர்க் களுக்குமாக அமைந்துள்ளன. 3 கால்கள் சுவர்க்க, மத்ய, பாதலமாக அமைந்துள்ளன. ஏழு கைகள் என்பதை ஏழு நாக்குகள் என்றும் கூறுவதுண்டு. இவை 'ஏழுலகும் கொண்டு கொடுத்தற்கு ஆகுமோ!' என எண்ணத்தோன்றுகிறது என்று அக்னிதேவன் சிறப்பினை எடுத்து விவரித்தபோது புதிய கருத்துக்களை அறிந்துகொண்ட திருப்தியால் மனம் நிறைந்தது.

"முகைக்குமலரின் வாசம்போல் விசாரசருமர் அலகில் கலை பலவற்றை" முந்தை அறிவின் தொடர்ச்சியினால் உணர்ந்தார். 'கலையின் எல்லை ஆடும் கழலே' எனத் தெளிந்தார். மறை யோர்கள் இவர் அறிவுகண்டு அதிசயித்தனர். ஒருநாள் விசார சருமர் வீதியில் செல்லும்போது பசுவினை இடையன் அடித்துத் துன்புறுத்தியதைக் கண்டார் – இவ்வாறு வரலாற்று விளக்கம் அருளியகுருமணிகள் பசுவை அடிக்கக்கூடாது என உபதேசித் தார்கள். எதற்கும் சிறப்பான காரணம் கூறுவது அவர்கள் தனிச்சிறப்பு.

பசுவை அடிக்கக்கூடாது ஏன்? பசுவின் உடல்முழுதும் தேவர்கள் உள்ளனர். சிரத்தில் சிவபெருமான் இருக்கிறார்; நெற்றியில் அம்பாள் இருக்கிறார்; சமுத்திர ராஜன் மடியில் இருக்கிறார்; நான்கு கால்களும் அசுவினிதேவர்கள்; கண் இரண்டும் சூரிய சந்திரர்கள்; மயிர்க்கால்களில் முப்பத்து முக் கோடி தேவர்கள். அதுமட்டுமா? "ஆடினான் நறுநெய், பால், தயிர்" என்றும், "நெய்யும் பாலும் தயிரும் கொண்டு நித்தல் பூசனை செய்யலுற்றேன்" என்றும், "பாலினொடு தயிர் நறுநெய் ஆடினான் காண்" என்றும், அபிடேகப் பொருள்களாகக் கூறப் படும் பால், நெய், தயிர், கோஜலம், கோமயம் என்னும் பஞ்சகவ்யம் (ஆனைந்து) பசுவினிடமிருந்தல்லவா பெறப்படு கிறது" விளக்கமான இந்த விடை நன்னெறிப் படுத்தும் உபதேசமாக அமைந்திருந்தது.

பசுவை அடித்தமைகண்ட விசாரசருமர் அப்பசுக்களைத் தாமே நன்முறையில் அன்போடு – பக்தியோடு மேய்த்தார். ஆதலால் அவை விசாரசருமர் அருகே வந்தன. பால் சுரந்தன. ஞானசம்பந்தரைப் பற்றி அறிந்த உடனேயே மங்கையர்க்கரசியாருக்குப் பால்சுரந்தமை போலத் தானகவே பால் கீழே பொழிந்தது! பக்திபரவசம் பொருந்திய விசாரசருமர், மணலால், இலிங்கம் அமைத்தார். குடத்தில் பாலைப்பிடித்தார். முறைப்படி பூசனை புரிந்தார். பாலபிஷேகம் செய்வதை ஊரவர் அறிந்தனர். பசுக்கள் வீட்டிலும் நிரம்பப் பால் தந்தன. எனினும் அவர் தந்தையாரிடம் ஊரவர் முறையிட்டனர்.

எச்சதத்தனும் அதுகேட்டு மறுநாள் மகனறியாவாறு சென்று ஒருகுராமரத்தின் மீது இருந்து நிகழ்வதைக் கண்டார். விசாரசருமர் வழக்கம் போல் பக்திமுதிர்ச்சியோடு பாலைக் குடத்தில் சேமித்துப் பூசனைபுரிந்தார். தந்தையார் இறங்கிவந்து கவனித்து இதுபற்றித் தம்மைக் கேட்பதை, மெய்ம்மறந்து பூசனை ஆற்றிய விசாரசருமர் கவனிக்கவில்லை; எச்சதத்தன் பாற் குடங்களைக் காலால் இடறினர்; விசாரசருமர் கண்டார்; கோபம் கொண்டார். சிவாபராதம் அவர் கோபத்திற்குக் காரணம். அருகில்கிடந்த கோலினை எடுத்தார்; அதுமழுவாயிற்று. இடறிய இருகால்களை வெட்டினர்.

தந்தையார் இறந்தார்; சிவபெருமான் காட்சிதந்தார் சிவபெருமான் திருவடிகளில்விசாரசருமர்விழுந்தார்;வணங்கினர் பெருமான் அவரைத் தம்திருக்கரங்களால் எடுத்து 'நம் பொருட்டு உனைப் பெற்ற தந்தை தாளை வெட்டி இறக்கச் செய்தாய்; ஆதலால் நாம் இனி உனக்குத் தந்தை' என அருளினர்;தொண்டர் கட்கெல்லாம் தலைவராக்கினர். " நாம் உண்ட கலமும் உடுப்பனவும் ஆடுவனவும் உனக்காகச் சண்டீசனுமாம் பதம் தந்தோம்" என அருளினர் – இங்ஙனம் விசாரசருமர் சண்டீசர் ஆனவரலாற்றைத் தத்துவச் செறிவோடு விளக்கிப்பலநுட்பமான சிந்தனைகளையும் உபதேசித்தார்கள். மானிட உடலுடனேயே சிவபெருமானுக்கு மகனராகிய பாங்கினையும் அருளினர்கள். எச்சதத்தனும் திருவருளால்பிழைபொறுக்கப்பட்டுக் கயிலாயம் அடைந்தார்.

சண்டீசர் என்பது ஒருபதம். சூரியனுக்குத் தேசசண்டியும் அம்பாளுக்கு மாத்ருசண்டியும் விநாயகருக்குக் கும்பசண்டியும் முருகனுக்குக் குகசண்டியும் எனச் சண்டீசர் உண்டு. சிவபெருமானுக்குரிய சண்டீசர் 'தொனிச்சண்டி' எனப்படுவார். அதிகார

நந்திக்கும் ரிஷபதேவருக்கும் வேறுபாடு தெரியாமல் இருப்பது போலவே சண்டிக்கும், சண்டீசுவரருக்கும் மக்கள் வேறுபாடு அறியாமல் இருக்கின்றனர். கௌளசேதவராக கற்பத்தில் சண்டீசநாயனுர் சண்டியாக இருந்து அருள்பாலிக்கின்ருர்

இவ்வாறு பலகருத்துக்களை வரலாற்றை அடியொற்றிக்கூறிய குருமணிகள் ஆய்வு நோக்குடன் ஒரு சீரிய கருத்தைப் புலப் படுத்திஞர்கள்.

சுந்தரர், விசாரசருமர் பூசித்த சிவலிங்கத்தை எச்சதத்தன் சிதைத்ததாகவே கூறுகிருர். " கோல வெண்மணல் சிவன் தன் மேற்சென்றதாதைத் தாளறி எறிந்த சண்டி" என்னும் திருப் புன்கூர்த்தேவாரம் இதற்குச்சான்ருகும். ஞானசம்பந்தரும்''பால் கொண்டு அங்கு ஆட்டிடத் தாதை பண்டு முடிசேர்ந்த காலை அங்கு வெட்டிட" எனக் (3. 54. 7) கூறுகிருர். ஞானசம்பந்தரும் சுந்தரரும் நடந்ததை நடந்தவாறு அப்படியே கூறினர். ஆனல் சேக்கிழார் பாற்குடத்தை இடறினர் என்றுமட்டும் கூறியது மரபு காத்தல் என்னும் நிலைபற்றியாகும்" என்பது அது.

தொகை நூலாசிரியர் சுந்தரர், ஞானசம்பந்தருக்கும், சண்டீசருக்கும் மும்மூன்று அடிகள் பாடிப் பெருமையளித்த மையை அடியொற்றி, விரிநூல் ஆசிரியர் சேக்கிழாரும், ஞானசம்பந்தர், சண்டீசர் ஆகிய இருவரை மட்டுமே' 'சிறிய பெருந்தகையர்' எனப் போற்றியுள்ளார் என அருளியமை மேலும் அவர்களின் ஆய்வுநோக்கினை உணர்த்துவதாய் அமைந்து இருந்தது.

தத்துவக் கோட்பாடுகளும், இலக்கிய மேற்கோள்களும், துணைக்கதைகளும் அமையக்குருமணிகள் சண்டீசர்வரலாற்றை மனங்கொளுமாறு உணர்த்தி - வாழ்வாங்கு வாழும் நெறியைப் புராணவாயிலாக உபதேசித்தார்கள்.

உள்ளம் நிறைந்தது. உணர்வும் எழுந்தது. கனிச்சாறு பருகினேம். இல்லம் திரும்பினேம்.

வாழ்க குருமணிகள்!

# செய்திகள்

## ஆயில்யத்திருநாள் ஆலயவழிபாடு

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் ஜன்ம நட்சத்திரமாகிய ஆயில்யத் திருநாளில் தேவாரப்பாடல்பெற்ற சிவத்தலங்களில் சிறப்பு வழிபாடுகள் நிகழ்ந்துவருகின்றன. இறைவழிபாட்டுநெறியில் அன்பர் பலரையும் ஈடுபடுத்தி வரும் ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு இம்மாதம் 29—7—1984 அன்று திருச்சோபுரம் தலத்தில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. திருஞானசம்பந்த சுவாமிகள் பாடல் பெற்ற சிறப்புடையது இத்தலம். இத்தலத்துச் சுவாமி அம்பாளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. 'திருச்சோபுரத் திருப்பதிகம்' என்ற நூல் வெளியிடப்பெற்றது. தலத்திருப்பதிகப் பாராயணம் நடைபெற்றது. தருமையாதீனத் தமிழ்ப்புலவர், வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர், எம். ஏ., தலச்சிறப்புக்களை விளக்கி உரையாற்றினர். அன்பர் பலர் வழிபாட்டிற் கலந்து கொண்டு பயன்பெற்றனர்.

## ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் குருபூஜை

சமயகுரவருள் நான்காமவராகப்போற்றப்படும் ஸ்ரீமாணிக்க வாசக சுவாமிகள் குருபூஜைவிழா தருமையாதீனம ஸ்ரீ ஞான புரீசுவரர் திருக்கோயிலில் ஆனிமாதம்மகநாளாகிய 8—7—1984 செவ்வாய்க்கிழமையன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. காலை ஸ்ரீமாணிக்கவாசகருக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்வுற்றன. பினனர் ஆதீனத்திருமடத்தில் ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் பூஜைமடத்தில் திருவிளையாடல் புராண பாராயணம் சிறப்பாகச் செய்யப்பெற்றது. மாலை 7-30 மணியளவில் வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன், எம். ஏ. மாணிக்க வாசகர் அருள்வரலாறு பற்றியும், வித்துவான் திரு. சொ. முத்தையா தேசிகர் எம். ஏ., மாணிக்கவாசகர் அருள் நூல்கள் பற்றியும், உரையாற்றினர். காலை, மாலை இருவேளைகளிலும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருக்கோயிலுக்கு எழுந்தருளி வழிபாடாற்றினர்கள். இரவு ஆதீன ஓதுவாமூர்த்திகள், தேவாரப் பாடசாலை மாணவர்களின் திருவாசகப் பாராயணத்துடன் ஸ்ரீ மாணிக்கவாசகர் திருவீதியுலா மிகச்சிறப்பாக நடைபெற்றது.

## மகாகயிலாயக் காட்சி வெள்ளிவிழா

ஸ்ரீ அப்பர் சுவாமிகள் கயிலைகண்ட நாளாகிய ஆடி அமாவாசையன்று தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணிகள் தரிசித்த மகாகயிலாயக்காட்சி இருபத்தைந்தாவது ஆண்டு – வெள்ளிவிழா 28—7—1984 சனிக்கிழமை மிகச்சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. காலை, மாலை இருவேளைகளிலும் ஸ்ரீ சொக்கநாதப்பெருமான் பூஜை மடத்தில் திருக்கயிலாயத்திருவுருவப்படத்திற்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் வழிபாடு நிகழ்த்தினர்கள். பண்ணிசைவாணர்களால் திருமுறைப் பாராயணம் அகண்ட பாராயணமாக நிகழ்த்தப்பெற்றது. நண்பகல் 1-00 மணிக்கு மாகேசுவரபூசை நடைபெற்றது.

மாலை 6-00 மணி அளவில் ஸ்ரீ சொக்கநாதப்பெருமான் பூசைமடத்தில் "மகாகயிலைக்காட்சி" என்னும் பொதுத் தலைப்பில் வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர், எம். ஏ., 'கயிலைத் தலங்கள்' பற்றியும் வித்துவான் திருமதி. ப. நீலா, எம். ஏ., 'காரைக்காலம்மை திருவாக்கில் கயிலைக்காட்சி' பற்றியும் வித்துவான் திரு. மு. சிவச்சந்திரன், எம், ஏ., சுந்தரர், 'சேரமான்பெருமாள் திருவாக்கில் கயிலைக்காட்சி' பற்றியும் வித்துவான் திரு. சொ. முத்தையன் 'ஞானசம்பந்தர்திருவாக்கில் கயிலைக்காட்சி' பற்றியும் வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன் எம். ஏ., 'அப்பர்பெருமான் திருவாக்கில் கயிலைக்காட்சி' பற்றியும் உரையாற்றினர். மகாகயிலாயக்காட்சி வெள்ளிவிழாவை முன்னிட்டு ஸ்ரீ சொக்கநாதப்பெருமான் பூஜைமடத்தில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில், கல்விப்பணியும் சமயப் பணியும் சிறப்புறச்செய்து பல்லாயிரம்மாணவர்களைத் தமிழகத்திற்குத்தந்த சிதம்பரம், திரு. பி. ஆர். சுவாமிநாதன் அவர்களுக்குச் 'சிவநெறிச் செல்வர்' என்னும் பட்டம் வழங்கிப் பொன்னாடை போர்த்தி ஆசியருளினர்கள். பல்லாண்டுகளாகச் சிறப்பாகத் திருமுறைப் பணிபுரிந்துவரும் சிதம்பரம் திரு. கனகசபை ஓதுவார் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்தி ஆசியருளினர்கள் இரவு வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப் பெற்ற வெள்ளிரதத்தில் பண்ணிசை வாணர்களின் திருமுறைப் பாராயணத்துடன் திருக்கயிலாயத் திருவுருவப்படத் திருவீதி உலா சிறப்பாக நிகழ்வுற்றது. திருக்கயிலாய நிலையத்தில் தரிசன வழிபாடு நிகழ்வுற்றது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அடியார்கள். அன்பர்கள் புடைசூழத் திருவுலாப்போந்தருளினர்கள். அன்பர்கள் வந்திருந்து வழிபட்டுப் பயன்பெற்றனர்.

## ஆடிப்பூரவிழா

திருத்தருமையாதீனத்திற்குச் சொந்தமான வைத்தீசுவரன் கோயில் என வழங்கும் வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்திலும் சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்திலும் திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி தேவஸ்தானத்திலும் 31—7—84 செவ்வாய்க்கிழமை ஆடிப்பூர மகோற்சவம் மிகச்சிறப்பாக நடைபெற்றது. தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருக்கடவூர், சீகாழித்தலங்கட்கு எழுந்தருளி வழிபாடாற்றினர்கள். அன்பர்பலர் தரிசித்து இறைவன் அருள் பெற்றனர்.

## சம்வத்ஸராபிஷேகம்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருப்புள்ளிருக்குவேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில் சௌமிய ஆண்டு ஆனித்திங்கள் 18ஆம் நாள் ( 2- 7—69 ) புதனன்று திருவோண நட்சத்திரத்தில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் நடைபெற்றது. இதனையொட்டி இரக்தாக்ஷி ஆண்டு ஆனித்திங்கள் 30 ஆம்நாள் 14—7—84 சனிக்கிழமை திருவோண நட்சத்திரம் கூடிய நன்னாளில் சம்வத்ஸராபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது. வேதபாராயணம், திருமுறைப்பாராயணம், ருத்ரஜபம், முதலியவற்றுடன் விசேஷ அபிஷேகம் அருச்சனை முதலியவை நிகழ்வுற்றன. பக்தர்பலர் கலந்துகொண்டுவழிபட்டு பயன் பெற்றனர்.

## நாயன்மார் குருபூஜைத் திருநாள்கள்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமி திருக்கோயிலில் ஆனிரேவதி நாளில் ( 22—6—84 ) ஏயர்கோன் கலிக்காமர், மகநாளில் 3—7—84 மாணிக்கவாசகர், பூர நாளில் ( 4—7—84 ) அமர்நீதிநாயனர் ஆடிக்கார்த்திகை நாளில் ( 23—7—84 ) மூர்த்தியார், புகழ்ச்சோழர் திருவாதிரைநாளில் ( 29 7—84 ) கூற்றுவநாயனர் குருபூஜைத்திருநாட்கள் சிறப்பாக நடைபெற்றன. ஸ்ரீ நடராஜமூர்த்திக்கு அருச்சனை, சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தப்பெற்றன. தருமையாதீனம் ஸ்ரீகுருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர், வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன், எம். ஏ., புராணம் வாசித்து வரலாறு கூறினர். ஆகமபாடசாலை, தேவாரபாடசாலை ஆசிரியர்களும் மாணவர்களும் அன்பர்களும் கலந்துகொண்டுபயன்பெற்றனர், புராண விரிவுரைக்குப் பின் பிரசாதம் வழங்கப்பட்டது.




## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

(இரக்தாக்ஷி ஞு ஆவணி மீ 1உ முதல் 31உ முடிய)
(17—8—1984 முதல் 16—9—1984 முடிய)

ஸ்ரீ இரக்தாக்ஷி ஞு ஆடி மீ 32 ஆம்தேதி குருவாரம் ரேவதி நக்ஷத்திரம் தைதுலை கரணம் கூடியகாலத்தில் சூரிய உதயம் முதல் 39 நாழிகை 9 வினடிக்கு மீனலக்கினத்தில் மீனராசியில் ஸ்ரீலோகரட்சகரான சூரியபகவான் லோக சுபிட்சார்த்தத்தை முன்னிட்டுக் கடகராசியிலிருந்து சிம்மராசி சங்கிரமணமாக ஆவணிமாதப் பிரவேசம் செய்தருளுகின்றார். நாடுகளில் பிரஜைகள் கல்வி, கலை, ஞானம், தொழில்கல்வி இவைபயின்று திறமையுடையவர்களாகி ஜீவனோபாயங்களில் முன்னேறுவர். நாடுகளில் வளம் மிகுந்து உணவுப் பயிர்களில் விளைவு அதிகரிக்கும். பிரஜைகள் வாழ்க்கை வசதிகள் பல அனுபவித்து இனிது வாழ்வர்.

உலகெங்கும் உள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் ஈஸ்வர கட்டளையில் வந்து சிவசமயம் பரிபாலிக்கின்ற பரமா சாரிய சுவாமிகளாக, சிவராஜயோகத்தில் திருவீற்றிருக்கின்ற சிவஞானகுருமகான்கள் குருமகாசந்நிதானங்கள், உலகில் லோகமாந்தர்களானவர்கள் சாஸ்திரம் தத்துவார்த்தம் அறிதல் மேல்நிலையாகுதல்பொருட்டுத் திருவுளப்பாங்கில்ஞானவுரைகள் அருளியும் கற்போர் இளைஞர்கள் கலைஞானங்களில் தீட்சண்ய ஞானம் பெற்றுத் திறமையுடையவர்களாகி உயர்வெய்த ஆசீர் வாதம் செய்தும் அருள்வார்கள்.

1. மேஷம் :- அசுவதி - பரணி - கார்த்திகை - ¼

மேஷராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானம் கணிசமாக வந்துகொண் டிருக்கும். சகோதரருக்கு ஒப்பந்தங்களில் நல்லன ஏற்படும். நவீனவாகனம்தரும். நன்செய் புன்செய்ப் பயிர்களில் அபி விருத்தி பலனை உண்டுபண்ணும். புத்திரர் அல்லது புத்திரிக்கு

சுபம் ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம்நிலவும். ஆகஸ்டு 17, 18, 19, 22, 23, 29, 30 செப்டம்பர் 6, 7, 8, 9, 10, 14, 15 தேதிகளில் தனதாயம் தரும். ஜெயம் ஏற்படும். செப்டம்பர் 1, 2, 3 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன்தரும்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾ – உரோகிணி – மிருகசீஷம் ½

ரிஷபராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானம் நல்லவிதத்தில் வந்துசேரும். பூஷணங்களின் பிராப்தியையளிக்கும். வித்துவத்துவம் கலைத் துறைகளில் எழுத்துமூல விஷயங்களில் செப்டம்பர் 2 தேதிக்கு மேல் நல்லன ஏற்பட்டுவரும். வீடுவாகனங்களில் நவீன அமைப்பு ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஆகஸ்டு 20, 21, 24, 25, 31 செப்டம்பர் 1, 2, 3, 9, 10, 11, 12, 13, 16 தேதிகளில் தனதாயம் மிகுந்த நன்மைகள் ஏற்படுதல் ஆகும். செப்டம்பர் 4, 5 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன்தரும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை – புனர்பூசம் ¾

மிதுனராசி 9 பாதங்களும் சுபபலனாக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் நல்லதனவருமானங்கள் வந்து கொண்டிருக்கும். பொன் மணி பூஷணம் தரும். பூமி இயந்திரங்களில் விருத்தி பலன் ஏற்படும். பசு பால் பிராப்தியையளிக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஆகஸ்டு 17, 18, 19 22, 23, 26, 27, 28 செப்டம்பர் 1, 2, 3. 4, 5, 11, 12, 13, 14, 15 தேதிகளில் தனதாயம் நல்ல சௌகரியம் தரும். செப்டம்பர் 6, 7, 8 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்

4. கடகம் :- புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்.

கடகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானம் பெருமதிப்பில் வந்துசேரும். கண்யசெலவும் ஏற்படும். நல்லவர் சந்திப்பு நல்விஷய உரையாடல் சம்பவிக்கும். நன்செய்புன்செய் நிலங்களில் அபிவிருத்தி பலன் ஏற்படும். வாகன சுகம் திருப்தியளிக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஆகஸ்டு 17, 18, 19, 20, 21, 24. 25, 28, 29, 30 செப்டம்பர் 4, 5, 6, 7, 8, 14, 15, 16 தேதிகளில்தனதாயம் தரும். தெய்வதரிசனம் செய்தல் ஆகும். செப்டம்பர் 9, 10 தேதிகளில் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

5. சிம்மம் :- மகம் – பூரம் – உத்திரம் ¼

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானம் வரும். வஸ்திர பூஷணம்தரும்.

வித்தியா வியாபாராதிகளில் முன் விளம்பரமும் பின் நல்ல ஆதாயம் வருதலும் ஆகும். பூமி இயந்திரங்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஆகஸ்டு 20, 21, 22, 23, 26, 27, 28, 31 செட் 6, 7 8, 9, 10, 16 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களை யளிக்கும். செப்டம்பர் 11, 12, 13 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

6. கன்னி :- உத்திரம் $\frac{3}{4}$ – ஹஸ்தம் – சித்திரை $\frac{1}{2}$

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும் குடும்பாபிவிருத்தியில் பணவருமானம் வரும். டாம்பீகம் அரச கண்யம் இவற்றில் பொருட்செலவும் ஆகும். பூமி இயந்திரங் களில் அபிவிருத்திபலனை உண்டுபண்ணும். மனோதைரியத்தில் எல்லாக்காரியங்களையும் நடத்திவரும். வீடுவாகனங்களில்நல்ல சௌகரியம் தரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஆகஸ்டு 22, 23. 24, 25, 29, 30 செப்டம்பர் 1, 2, 3, 9, 10. 11, 12, 13, தேதிகளில் மிகுந்த நற்பலன் தரும். ஆகஸ்டு 17, 18 செப்டம்பர் 14, 15 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதி களில் மத்திமபலன் தரும்.

7. துலாம் :- சித்திரை $\frac{1}{2}$ – சுவாதி – விசாகம் $\frac{3}{4}$

துலாராசி 9 பாதங்களும் சுபபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானம் மூன்று விதங்களில் வந்துசேரும். வித்தியாவியாபாராதிகளில் கலைத்துறையில் நல்ல வாய்ப்புகளை ஏற்படுத்தும். எல்லாக்காரியங்களும் கண்யஸ்திதியில்நடக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஆகஸ்டு 17, 18. 19, 24, 25, 26, 27, 31 செப் 4, 5, 11, 12, 13, 14, 15 தேதி களில் தனதாயாதி நற்பலன்களை யளிக்கும். ஆகஸ்டு 20, 21 செப் 16 இத்தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

8. விருச்சிகம் :- விசாகம் $\frac{1}{4}$ – அனுஷம் – கேட்டை.

விருச்சிகராசி 9 பாதங்களும் சுபபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானங்கள் கணிசமாக வந்துகொண் டிருக்கும். வித்தியாவியாபாராதிகளில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். அரசகண்யமாக எல்லாக்காரியங்களும் நடந்து கொண்டிருக்கும். உத்தியோகத்தில் பதவிஉயர்வை ஏற்படுத் தும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஆகஸ்டு 17, 18, 19, 20, 21, 26, 27, 28, 29, 30 செப் 1, 2, 3, 6, 7, 14, 15, 16 தேதிகளில் தனதாயம், ஜெயம், நன்மதிப்பு ஏற்படும். ஆகஸ்டு 2, 23 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

9. தனுசு :- மூலம் – பூராடம் – உத்திராடம் ¼

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனை நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானங்களில் நல்லஸ்திதியைஏற்படுத்தும். கலைத்துறைகளில் முன்னேற்ற ஸ்திதிஏற்படும். வீடுவாகன பிராப்தியில் நல்ல சௌகரியம்தரும். புத்திரர் அல்லது புத்திரிக்கு சுபம் ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஆகஸ்டு 20, 21, 22, 23, 29 30, 31 செப் 4, 5, 9, 10, 16 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஆகஸ்டு 24, 25 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

10. மகரம் :- உத்திராடம் ¾ – திருவோணம் – அவிட்டம்½

மகரராசி 9 பாதங்களும் மிச்சிரபலனை நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானம் வரும். இரும்பு இயந்திரங்களில் ஓர் கணிசமான இலாபம் ஏற்படும். பழைய கட்டிடம் வாங்கிச் சீர்திருத்துதல் ஆகும். செப்டம்பர் 2 தேதி அளவில் ஓர் ஒப்பந்தம் ஏற்படும். தாரபுத்திரர்களின் நலம் நன்றாக இருந்துவரும். ஆகஸ்டு 22, 23, 24, 25, 31 செப்டம்பர் 1, 2, 3, 6, 7, 8, 11, 12, 13 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஆகஸடு 26, 27, 28 தேதிகள சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்,

11. கும்பம் :- அவிட்டம் ½ – சதயம்–பூரட்டாதி¾

கும்பராசி 9 பாதங்களும் மிச்சிரபலனை நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானங்கள் வெகுவாகவரும். பந்துக்கள் வருகைதருவர். உபசரணை வைபோகங்கள் நடக்கும். பூமி இயந்திரங்களில் விருத்திபலன் ஏற்படும். வாகனசுகம் திருப்தியளிக்கும். புத்திரர் பௌத்திரர்களினல் மகிழ்ச்சி ஏற்படும், தாம்பத்தியவாழ்வில் சுமுகம் நிலவும். ஆகஸ்டு 17, 18, 19, 24, 25, 26, 27, 28 செப்டம்பர் 1, 2, 3, 4, 5, 9, 10, 14, 15 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஆகஸ்டு 29, 30 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

12. மீனம் :- பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி.

மீனராசி 9 பாதங்களும் சுபபலனை நடக்கும். குடும்பாபிவிருத்தியில் நல்ல பணவருமானம் வரும். செப் 2 தேதி ஆனல் வித்துவத்துவம் கலைத்துறைகளில் அரசாங்கத்தில் நன்மதிப்பை உண்டு பண்ணும். புதிய ஒப்பந்தம் ஏற்படுதல் ஆகும். வீடு வாகனங்களில் நவீனம் ஏற்படும். வியாஜ்ய வழக்குகளில் ஜெயம் தரும். தாரபுத்திரர்களின் நலம் நன்றாக இருந்துவரும். ஆகஸ்டு 20, 21, 26, 27, 28, 29, 30 செப் 4, 5, 6, 7, 8, 11, 12, 13 16 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஆகஸ்டு 31 செப் 1 இத்தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

—●—